4 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண் எம். 8798.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 11) மதுரை 5-6-73 செவ்வாய் (மலர் 130

## காங்கிரஸ் ஆட்சியில் உயரும் விலைவாசி

புதுடெல்லி, ஜூன். 3—

காங்கிரஸ் ஆட்சியில் விலைவாசி ராக்கெட் வேகத்தில் உயர்கிறது. விலைவாசிப்புள்ளி 1962-ல் 100 என்ருல், 1973-ல் 231.3 ஆக உயர்ந்துள்ளது.

அதாவது 96?-ல் ஒரு பொருளின் விலை ரூ. 100 என்ருல், இன்று அதன் விலை ரூ 231.30 பைசா வாகும். இது அரசு தரும் புள்ளி விவரம். ஆனல் உண்மையான உயர்வு மேலும் அதிகமாக இருக்கும் என்று மதிப்பிடப்படுகிறது.



தோழர்

## பி. ராமமூர்த்தி பொதுக்கூட்ட நிகழ்ச்சிகள்

ஜூன் 5-- வேலூர் நகர்
,, 7-- திருச்சி நகர்
,, 11-- சேலம்
,, 12-- கோவை

# திண்டுக்கல் தீர்ப்பு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தமிழ் மாநிலக் குழு தீர்மானம்

மாயூரம், ஜூன் 3-

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யின் தமிழ் மாநிலக் குழு மே 31, ஜூன் 1, 2 ஆகிய தேதிகளில் மாயூரத்தில் நடந்தது.

அண்மையில் நடந்து முடிந்த திண்டுக்கல் நாடாளு மன்றத் தொகுதி உப-தேர்தல் முடிவையும் அதன் அரசியல் விளைவுகளையும் குறித்து கட்சியின் தமிழ் மாநிலக் குழு கீழ் வரும் தீர்மானத்தை நிறைவேற்றியுள்ளது:-

சமீபத்தில் நடந்து முடிந்த திண்டுக்கல் நாடாளு மன்றத் தேர்தலில் இந்த மாநிலத்தை ஆட்சி புரியும கட்சியான தி மு. க.வுக்கு பேரதிர்ச்சி தரும் பெரும் தோல்வி ஏற்பட்டுள்ளது. இதில் ஆளும்காங்கிரஸ் முழுமை யாகத் துடைத்தெறியப்பட்டுள்ளது. ஸ்தாபனக் காங் கிரஸ், சுதந்திரா, ஜனசங்கம் ஆகிய கட்சிகளின் வலது சாரி பிற்போக்குக் கூட்டணி தெளிவாக நிராகரிக்கப்பட் டுள்ளது.

இத்தகைய மகத்தான சாதனையை சாதித்த திண் டுக்கல் நாடாளுமன்றத் தொகுதி வாக்காளர்களுக்கு இந்திய கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்)யின் தமிழ் மாநிலக்குழு தனது உளங்கனிந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கிறது.

இந்தத் தேர்தல் போராட்டத்தில் வெகு சிறப்பாக வும் உற்சாகமாகவும் உணர்வுப்பூர்வமாகவும் பங்கு கொண்ட ஆயிரக்கணக்கான கட்சித் தோழர்களையும் ஆதரவாளர்களையும் தமிழ்மாநிலக் குழு வாழ்த்துகிறது.

### தேர்தல் வேலைகளை முடமாக்கும் முயற்சி முறியடிப்பு

இந்த தேர்தல் காலத்தில் போலீஸ் பாதுகாப்புடன் தி.மு.க. குண்டர்களின் மிகக் கொடூரமான தாக்குதல்கள் கட்டவிழ்த்து விடப்பட்டன. இதை மார்க்சிஸ்ட் கட்சி, அ.தி.மு.க., மற்றும் தோழமைக் கட்சிகளின் ஊழியர்கள் எதிர்த்து நின்றனர். நமது தேர்தல் வேலைகளை முட மாக்கும் முயற்சியும் முறியடிக்கப்பட்டது.

தி. மு. கவுக்கு எதிராக வாக்களிக்கக்கூடிய வாக் காளர்களை பயமுறுத்தினர்; அவர்களை வாக்களிக்க விடா மல் தடுக்கவும் முயற்சி செய்யப்பட்டது. ஆட்சி பீடத்தில் உள்ள தி. மு. க. தீட்டியிருந்த இந்த பயங்கர சதித் திட் டத்தை இறுதியாகவும், உறுதியாகவும் முறியடித்த ஆயி ரக்கணக்கான நம் தோழர்களையும், ஆதரவாளர்களையும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின தமிழ் மாநிலக்குழு வாழ்த்துகிறது.

### தோழமை கட்சிகளுக்கு வாழ்த்து

இந்தத் தேர்தலின்போது நமது ஊழியர்களுடன் அ.தி.மு.க. ஊழியர்கள் முழுமனதுடன் ஒத்துழைத்தார் கள். தியாக உணர்வுடன் அயராது செயலாற்றி மகத் தான வெற்றியினை ஈட்டிய பல்லாயிரக்கணக்கான அ. தி. மு.க. ஊழியர்களையும்,இந்தியக் கம்யூனிஸ்ட்கட்சி ஊழியர் களையும், இதர ஜனநாயக இயக்கங்களைச் சார்ந்த ஊழியர் களையும் ஆதரவாளர்களையும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக்குழு வாழ்த்துகிறது.

### லஞ்சம்-ஊழல்-அடக்கு முறை

திண்டுக்கல் நாடாளுமன்றத் தேர்தல் ஒரு சாதா ரணமான தேர்தல் அல்ல! தங்களது உரிமைகளுக்காகப் போராடும தொழிலாளர்கள், விவசாயிகள், விவசாயத தொழிலாளிகள், மாணவர்கள், ஆசிரியர்கள் ஆகிய சகல உழைக்கும் மக்களுக்கும் எதிராக, கடந்த ஐந் தாண்டு காலத்தில் தி.மு.க அரசு கட்டுக்கடங்காத அடக்கு முறைகளையும், குண்டர்களின் தாக்குதல்களையும் கட்ட விழ்த்துவிட்டது. அரசாங்கம் என்பது தி. மு. கழகத்தின், அதன் தலைவர்களின் நலன்களைப் பாதுகாக்கும் கட்சி எந்திரமாகச் செயல்பட்டது. அதன் ஆட்சி காலத்தில் லஞ்சமும், ஊழலும் பூதாகரமான அளவில் வளர்ந்தன. இவைகளின் விளைவாக தி. மு. கழகத்துக்குள்ளேயே சீர் குலைவும், கோஷ்டிப் பூசல்களும் வளர்ந்துள்ளன.

தி. மு. கவிற்கு எதிராக மக்களிடையே வளர்ந்து வந்த இந்த அதிருப்தியின் பின்னணியில்தான் அது பிளவு பட்டது. அதிலிருந்து தி மு கவுக்குச் சவால் விடும் அளவில் அ தி மு க உருவாயிற்று. தி மு கவுக்குள்ளேயே அதை எதிர்த்துக கிளம்பிய இப்போராட்டத்தை அடக்கி ஒடுக்க தி.மு.க. அரசு முன்வநதது. தன்கொள்கைகளுக்கு எதிராகப போராடிய ஏனைய கட்சிகளுக்கும், மக்களுககும் எதிராக எவ்வாறு கடுமையான அடக்கு முறைகளை இதற்கு முன் தொடுத்ததோ, அதே அடக்கு முறைகளை அ தி மு கவையும ஒடுக்கப் பயன்படுத்தியது. ஆயிரக் கணக்கான பொய் வழக்குகள் ஜோடிககப்பட்டன. போலீஸ் பாதுகாப்புடன் தி மு க குண்டர்களின் தாக்கு தல்கள் கொடுக்கப்பட்டன.

### குற்றம் சாட்டப்பட்டவர்களே நீதிபதிகளாக மாறினர்

இத்தகைய அடக்கு முறைப்பாதை தமிழ் மக்களின் கோபாவேசத்திலிருந்து தி மு க வைப் பாதுகாக்கப் பயன்படாது என மார்க்சிஸ்ட் கட்சியின் தமிழ்மாநிலக்குழு 1972 நவம்பரில் எச்சரித்தது.

திரு. எம். ஜி. ஆர் அவர்களும், ஏனையோரும்கூறிய ஊழல் குற்றச்சாட்டுகளை இந்தியத் தலைமை நீதிமன்ற நீதிபதியின் விசாரணைக்கு விட வேண்டும், என்று மார்க் சிஸ்ட் கட்சி கோரியது.

ஆனல் இக்கோரிக்கையை தி மு க அரசு மறுத்து விட்டது. இந்த விசாரணைக்கான ஆதாரங்கள் எதுவுமே இல்லையென்று சாக்குப் போக்குக் கூறியது. இவ்வாறு குற் றம் சாட்டப்பட்டவர்களே நீதிபதிகளாக மாறினர்.

இதே அடக்கு முறை, லஞ்ச ஊழல் பாதையில் தி மு க அரசு தொடர்ந்து நடைபோடுமானல் அது பதவி யில் நீடித்திருக்கும் உரிமையை இழந்து விடும் என்றும் மார்க்சிஸ்ட் கட்சி அன்று எச்சரித்தது.

### அப்பட்டமான போலீஸ் ஆட்சி

நமது எச்சரிக்கைக்கு தி மு க அரசு செவி சாய்க்க வில்லை. மாருக, எதிர்க்கட்சிகளின் மீது அதன் அடக்கு முறைகளும், ரவுடித்தாக்குதல்களும் அதிகரித்தன. போலீஸ் இலாகாவை, தி. மு. க. அரசு கண்மூடித்தன மாகச் செயல்படுத்தியது. தி.மு.க. அரசின் கொள்கை களுக்குஎதிராக மக்கள் குரல்எழுப்பியஒவ்வொரு சமயத்தி லும், போலீஸ் வெறியாட்டம் கட்டவிழ்த்துவிடப்பட்டது. நெல்லை, திருச்சி, கன்னியாகுமரி, ஆலங்குடி, பட்டுக் கோட்டை இனனும் பல இடங்களில நடந்த போலீஸ் வெறியாட்டங்கள் இதற்கு கடுமையான உதாரணங் களாகும். அப்பட்டமானதொரு போலீஸ் ஆட்சியே இந்த மாநிலத்தில் நிலவியது.

இத்தகைய நிகழ்ச்சிகளுக்குப் பிறகும் இந்த நாட்டு மக்கள் தங்களைத்தான் ஆதரிக்கிருர்கள் என்றும், இதைத் திண்டுக்கல் உப-தேர்தலிலேயே நிரூபித்துக் காட்டுவோம் என்றும் தி. மு. க. தலைவர்கள் சவால் விடுத்ததை இங்கு குறிப்பிடுவது அவசியம். அதனுல்தான் இந்த உபதேர்த லில் எப்படியாவது வெற்றி பெற்றிட தங்கள் கையிலி ருந்த சகல ஆயுதங்களையும் பயன்படுத்த தி. மு. க. முன் வந்தது.

### கொலைத் தாக்குதல்- படுகொலை-- பொய் வழக்குகள்

எல்லா அமைச்சர்களும் அந்தத் தொகுதியில் முகாமிட்டனர். முன் எப்போதும் கண்டும் கேட்டுமிராத அளவில் அரசு எந்திரத்தை முழுமையாகப் பயன் படுத்தினர். தேர்தல் நடைபெறுவதற்கு இரண்டு மாதங் களுக்கு முன்பே தேர்தல் நடக்கும் தொகுதியில் அரசாங் கம் திட்டவேலைகள் எதையும் மேற்கொள்ளக் கூடாது என்பது தேர்தல் நெறி முறைகளில் ஒன்ருகும். தேர்தலில் பங்குகொள்ளும் கட்சிகளிடையே நிலவ வேண்டிய இத்தகைய தேர்தல் நெறிமுறைகள் மீறப்பட்டன. திண்டுக்கல் தொகுதியில் அவசரம் அவசர மாக பல திட்டங்களை நிறைவேற்றப்போவதாக அறிவித்து, அவைகளுக்கு தி. மு. க. அமைச்சர்கள் ஸ்தலத்திலேயே ஒப்புதல் வழங்கினர். தண்ணீரைப்போல் பணத்தை வாரி இரைத்தனர். அ. தி. மு. க. அலுவலகத்துக்கு எதிராகவும், அதன் ஊழியர்களுக்கு எதிராகவும் தி. மு. க. குண்டர் களின் நீசத்தனமான தாக்குதல்கள் தொடுக்கப்பட்டன

வத்தலக்குண்டில் அ.தி.மு.க. ஊழியர் ஆறுமுகம் படுகொலை செய்யப்பட்டார். இத்தகைய குற்றங்கள் புரிந்த தி.மு.க. ரௌடிகள் சுதந்திரமாக உலாவினர். அதே சமயத்தில் நூற்றுக்கணக்கான அ.தி மு.க— மார்க் சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சி, இந்திய கம்யூனிஸ்ட்கட்சி ஆகிய கட்சிகளைச் சேர்ந்த ஊழியர்கள கைது செய்யப் பட்டனர். அவர்கள் மீது பல பொய் வழக்குகள் ஜோடிக் கப்பட்டன. இத்தகைய நிகழ்ச்சிகளுக்குப் பிறகும், பேரதிர்ச்சியைத்தந்த தோல்வியைத்தான் தி. மு. க. திண்டுக்கல்லில் சந்திக்க முடிந்தது.

1971-ஆம் ஆண்டில் நடந்த தேர்தலின் போது இதே தொகுதியில் மொத்தம் பதிவான வாக்குகளில் சுமார் 62 சதவிகிதம் வாக்குகளைப்பெற்று தி. மு. க வெற்றி பெற்றது. ஆனல் இப்பொழுது நடந்து

(4-ஆம் பக்கம் பார்க்க)

## தகுதிபெருத தி.மு.க. ஆட்களுக்கு உயர் பதவி

### அவர்களுக்கு மட்டுமே ஓவர்டைம் ஊதியம்

### முதலமைச்சர் பேச்சுக்கு தோழர் வி. பி. சிந்தனின் பதிலடி

கோவை, ஜூன் 4—

அரசாங்க நிர்வாகத்தில் தி. மு. க.வினர் தலையீடும் அட்டகாசமும் சகிக்க முடியாத அளவுக்கு மீறிவிட்டது. இதனுல், காலமெல்லாம் பாடுபட்டு, அதற்கான பதவி உயர்வு, ஊதிய உயர்வு முதலியவைகளை உரிமையோடு பெறமுடியாமல், பாட்டாளி மக்கள் தடுக்கப்படுகிருர்கள்.

இதே போன்ற அக்கிர மத்தையும் அநியாயத் தையும் வேறு எங்காவது கண்டது உண்டா?

இது குறித்து, தமிழ்நாடு மின்வாரியத் தொழிலாளர் மத்திய சமமேளனத்தின் நிருவாகக்குழு, 27—5—73ல் சமமேளனத் தலைவர் சி. கோவிந்தராஜன் தலைமை யில் கோயமுத்தூரில் கூடி தி. மு, க. அரசின் மீது குற்றம் சாட்டியுள்ளது.

#### குற்றச்சாட்டு

"ஆளும் கட்சியினர்,மின் வாரிய நிர்வாகத்தின் அன் ருடக் கடமைகளில் தலை யிடுகிருர்கள். அதிக சர் வீஸ் உள்ள சீனியர்களை யும், திறமைமிக்கவர்களை யும், அவர்கள் தி. மு. க அல்லாத சங்கத்தைச் சேர்ந்தவர்கள் என்ற கார ணத்தால் அவர்களைப் புறக்கணித்துவிட்டு,தி.மு.க. சங்கத்தைச் சேர்ந்த வர்களுக்கு மாத்திரமே பதவி உயர்வுகளும் சம்பள உயர் வுகளும் கிடைக்கவும் நிரந் தரமாக்கவும் ஏற்பாடு செய்து கொள்ளுகிருர்கள் என்று குற்றம் சாட்டி யுள்ளது.

அது மட்டுமன்றி, தி. மு. கழக சார்புடைய சங்கத் தைச் சேர்ந்தவர்களுக்கு மாத்திரமே ஓவர்டைம் சம் பளம் கொடுக்கப்படுவதாக வும் குற்றம் சாட்டியுள்ளது

#### முதலமைச்சர் மறுப்பு வி. பி சிந்தன் கண்டனம்

தொழிற் சங்கத்தின் இந்தக் குற்றச் சாட்டை தி மு க முதலமைச்சர் மு. கருணநிதி சென்னையில் பத்திரிகை நிருபர்கள் கூட் டத்தில் ஒரேயடியாக மறுத் திருக்கிருர்.

தி. மு. கவுககு எதிர்ப்பாக உள்ள ஊழியர்கள், யாரே னும் பதவி உயர்வு விஷய பாக பாதிக்கப்பட்டிருந்தால் அப்படிபபட்ட குறிப்பான விஷயங்களை எடுத்துக் காட்டினல் அதுபற்றி கவனிப்பதாக முதலமைச் சர் கூறினர்.

முதல்வரின் இந்த மறுப் பானது. தி.மு.க.வின் ஜன நாயக விரோத நட வடிக்கைகள் முழுவதை யும் மூடிமறைக்கும் முயற்சி யாகும் என்றுதொழிலாளர் தலைவர் வி. பி. சிந்தன் கண் டனம் தெரிவித்துள்ளார்.

கீழ்க்கண்ட உண்மை களை முதலமைச்சரால் மறுக்க முடியுமா?-என்றும் தோழர் சிந்தன் சவால் விடுத்துள்ளார்.

#### பரம்பிக்குளத்தில் நடந்தது என்ன?

பரம்பிக்குளம் ஆழியா றில் வேலை செய்யும் டெம்ப ரரி தொழிலாளர்களை— அதாவது 4 ஆண்டு வரை சர்வீஸ் ஆகியும் டெம்பரரி களாக வைக்கப்பட்டிருப் பவர்களை — பெர்மனென்ட்

(4-ம் பக்கம் பார்க்க)

## முசாபர் அகமது சுகவீனம்

கல்கத்தா, ஜூன். 1—

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய கமிட்டி உறுப்பினரும், நம்நாட்டில் கம்யூனிஸ்ட் கட்சி தோற்று விக்கப்பட்ட காலத்தி லிருந்து கம்யூனிஸ்ட் கட்சி யுடன் நீங்காத பிணைப்புக் கொண்டிருப்பவருமான முதுபெரும் தலைவர் தோழர் முசாபர் அகமது கொஞ்ச காலமாக சுகவீனமுற்றுள் ளார்.

அவருடைய உடல்நிலை தொடர்ந்து கவலையளித்து வருவதாக மார்க்சிஸ்ட் கம் யூனிஸ்ட் கட்சியின் மேற்கு வங்கக் கமிட்டிச் செயலா ளர் தோழர் புரமோத்தாஸ் குப்தா அறிவித்துள்ளார்.

## காங்கிரஸ் குண்டர்களால் தாக்கப்பட்ட எம். எல். ஏ. மரணம்

கல்கத்தா, ஜூன் 2—

காங்கிரஸ் கட்சிக்குள் நடக்கும் கோஷ்டிச் சண் டையில் காங்கிரஸ்குண்டர் களால் தாக்கப்பட்ட காங் கிரஸ் எம். எல். ஏ. யான சாந்திபாத மித்ரா இன்று காலை காலமானர்.

காங்கிரஸ் குண்டர் களால் அவர் ஓட ஓட விரட்டியடிக்கப்பட்டு தாக் கப்பட்டார்.

படுகாயமுற்று மருத்துவமனையில் சேர்க்கப் பட்டிருந்த அவர் 9-நாட் கள் உயிருடன் போராடி னர்.

கடைசிவரை பிரக்ஞை வராமலேயே அவர் இறந் தார்.

42—வயதான அவருக்கு மனைவியும் ஒரு மகனும் ஒரு மகளும் இருக்கிருர்கள்.

கிணறு வெட்ட பூதம் கிளம்பியது போல் காங் கிரஸ்காரர்களால் எதிர்க் கட்சிகளுக்கு எதிராகக் கிளப்பி விடப்பட்ட வன் முறை இன்று காங்கிரஸ் காரர்களுக்கே எதிராகக் கிளம்பியுள்ளது.

சாந்திபாத மித்ரா இறந்த பின் எங்கே தங்கள் உயி ருக்கும் ஆபத்து ஏற்ப டுமோ என்று மற்ற காங் கிரஸ் எம் எல் ஏ க்களுக்கும் அச்சம் ஏற்பட்டுள்ளது.

## பார்வதி கிருஷ்ணனுக்கும் எம். கல்யாணசுந்தரத்துக்கும் பி. ராமமூர்த்தி, பாலசுப்ரமண்யம் அனுப்பிய அனுதாபத்தந்திகள்

மாயூரம், ஜூன். 4—

மந்திரி மோகன்குமார மங்கலம், தோழர் கே. பாலதண்டாயுதம் முத லானவர்கள் விமான விபத் தில் மாண்ட தகவல் கிடைத்தவுடனேயே மார்க் சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தலைவர் பி. ராமமூர்த்தி மோகன்குமாரமங்கலத்தின் சகோதரி பார்வதிகிருஷ்ண னுக்கு ஓர் அனுதாபத்தந்தி அனுப்பினர். அதில் மோக னின துணைவியாருக்கும், குடும்பத்தினருக்கும் அனு தாபத்தைத் தெரிவிக்கு மாறும் குறிப்பிட்டிருந்தார்

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழகச் செய லாளர் ஏ. பாலசுப்ரமண்ய மும், பி ராமமூர்த்தியும் இந் திய கம்யூனிஸ்ட் கட்சி தமிழ் மாநிலக்குழு செய லாளர் எம். கல்யாணசுந்த ரத்துக்கு தந்தி மூலம் அனு தாபத்தை தெரிவித்துக் கொண்டார்கள். அதில்:—

தோழர்கள் பாலதண்டா யுதம், ஏ ஐ டி யூ சி செய லாளர் தோழர் சதிஸ் லூமபா ஆகியோர் மரணம் குறித்து மார்க்சிஸ்ட் கம் யூனிஸ்ட் கட்சியின் அனு தாபத்தைத் தெரிவித்துள் ளார்கள்.

விமான விபத்து செய்தி கிடைத்தபோது, மார்க் சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி யின தமிழ் மாநிலக்குழு கூட்டம் மாயூரத்தில நடந்து கொண்டிருந்தது. அக்கூட்டத்தில் அனு தாபத் தீர்மானம் ஒன்றும் நிறைவேற்றப்பட்டது.

## பிரிட்டனில் தலைப்பாகையை விட சீக்கியர் மறுப்பு

லண்டன், ஜூன். 3—

பிரிட்டனில் குடியேறி யிருக்கும் சீக்கியர்கள் தலைப்பாகை அணியும் வழக்கத்தை கை விடு வதற்கு கடும் எதிர்ப்பு தெரி வித்துள்ளனர்.

பிரிட்டனில் மோட்டார் சைக்கிள்களில் செல்லு வோர் இரும்புத் தொப் பியை கட்டாயமாக அணிய வேண்டும் என்று சட்டம் இயற்றப்பட்டுள்ளது.

மத நம்பிக்கைப்படி சீக்கி யர்கள் எல்லா நேரங் களில் தலைப்பாகை அணிந் திருக்க வேண்டுமாதலால் இரும்புத் தொப்பி அணிய வேண்டும் என்ற சட்டத் துக்கு எதிர்ப்புத தெரிவித் துள்ளனர்.

பிரிட்டனிலுள்ள சீக்கிய சபையும் அரசாங்கத்துக்கு மனுக்கொடுக்கத் தீர் மானித்துள்ளது.

# தீக்கதிர்

## திரிபாதிக்கு மேலிடம் முட்டுக் கொடுப்பதேன்?

உத்திரபிரதேச சட்டமன்றத்துக்கு அடுத்த ஆண்டில் தேர்தல் நடைபெற இருப்பதால் அங்கு காங்கிரஸ் கட்சியைப் பலப்படுததுவதற்கு பிரதமர் இந்திராகாந்தி தனிக் கவனம் செலுத்தி வருகிறார்.

இந்த நோக்கத்தில் சமீபகாலம்வரை அனேகமாக, வாரம்தோறும் உ.பி. மாநிலத்துக்குச் சென்று பொதுக் கூட்டங்களில் அவர் பேசி வந்தார். இந்தப் பொதுக்கூடடங்களுக்கான ஏற்பாடுகள் கூட டில்லியிலிருந்தே செய்யப்பட்டன. அந்த அளவுக்கு அடிமட்டத்தில் காங்கிரஸ் கட்சி மக்களிடம் தொடர்பு அறுந்துள்ளது.

அண்மையில் ஏற்பட்ட போலீஸ்காரர்களின் போராட்டம் காங்கிரஸ் ஆட்சியும், கட்சியும் மக்களிடம் எவ்விதப் பிடிப்பும் அற்றிருப்பதை நாடறியப் பறைசாற்றியுள்ளது.

இத்தனை வருடங்களாக மக்களுடைய போராட்டங்களை அடக்கி ஒடுக்குவதற்கு காங்கிரஸ் அரசின் கையில் ஆயுதமாகத் திகழ்ந்திருப்பது போலீஸ் படையேயாகும்.

இந்த போலீசின் படையையே காங்கிரஸ் அரசு நம்பியிருக்க முடியாத நிலை ஏற்பட்டிருப்பதை போலீஸ் படைகளை ஒடுக்குவதற்கு ராணுவத்தைக் கொண்டு வந்து மோதவிட்ட நிகழ்ச்சி எடுத்துக் காட்டியது.

போலீஸ் படைகளின் குறைகளை ஐந்து ஆண்டுகளுக்கு மேலாக உ.பி. அரசு அலட்சியப்படுத்தியதின் விளைவாகவே போலீஸ் போராட்டம் வெடித்தது.

காங்கிரஸ் ஆட்சிக்கு உறுதுணையாக இருக்கும் போலீஸ் படைகளின் குறைகளையே ஐந்து ஆண்டுகளாகத் தீர்க்காதவர்கள் மக்களுடைய குறைகளைப் பற்றி கிஞ்சிற்றும் கவலைப்படுவார்கள் என்று கருத முடியுமா?

பி. ஏ. சி. என்று அழைக்கப்படும் மாநில ஆயுதப் போலீஸ் படையின் போராட்டம் வரலாற்றில் கண்டிராத போராட்டமாகும். இப்போராட்டத்தை ஒடுக்குவதற்கு ராணுவத்தைக் கொண்டுவந்த சமயத்தில்கூட ஆயிரக்கணக்கான போலீஸ்காரர்கள் ஆயுதங்களை ஒப்படைக்க மறுத்திருக்கிறார்கள். கடந்த 25 ஆண்டுகளாக காங்கிரஸ் ஆட்சிக்கு எதிராக நடைபெற்ற மக்கள் போராட்டங்களையெல்லாம் ஒடுக்கி காங்கிரஸ் ஆட்சியைப் பாதுகாக்க கருவியாகப் பயன்பட்டவர்கள்கூட இந்த ஆட்சி மீது நம்பிக்கையிழந்துள்ளதை இது எடுத்துக்காட்டுகிறது. இந்த நிலைமையில்கூட உ.பி. யில ஆட்சி முறையில் எந்தவித மாறுதலும் ஏறபடவில்லை.

போலீஸ்காரர்கள் போராட்டத்தில் பங்குகொண்டதற்காக ஆயிரத்துக்கு மேற்பட்டவர்களை வேலை நீக்கம் செய்ய திரிபாதி அரசாங்கம நடவடிக்கை எடுத்துள்ளது.

ஆனல் மக்களிடம் மட்டுமின்றி காங்கிரஸ் கட்சிக்குள்ளேயே, காங்கிரஸ் எம. எல். ஏ.க்கள் மததியிலேயே நம்பிக்கையிழந்திருக்கும் கமலபதி திரிபாதி முதலமைச்சர் பதவியிலிருந்து விலக முடியாது என்று அறிவித்துள்ளார். உ.பியில் சமீபத்தில் நடந்துள்ள சம்பவங்களின் காரணமாக தாம் ராஜினுமா செய்ய வேண்டியதில்லை என்றும் அறிவித்துள்ளார். போலீஸ்காரர்கள் கிளர்ச்சி ஏன் வெடித்துள்ளது என்று அவர் பார்க்கவில்லை இந்தக் கிளர்ச்சியை ஒடுக்கியதின் மூலம் தமமுடைய ஆட்சி நிலையான ஆடசியாக இருக்க முடியும் என்று அவர் அபிப்பிராயப்படுகிறார்.

அண்மையில் நடைபெற்ற உ.பி. சட்டமன்ற காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தில் திரிபாதி அமைச்சரவையை அடியோடு மாற்றியமைக்க வேண்டும் என்று உறுப்பினர்கள் கோரியுள்ளனர். அமைச்சரவை மீது லஞ்ச ஊழல் குற்றச்சாட்டுகளே சுமத்தப்பட்டன. திரிபாதி காங்கிரஸ் எம. எல். ஏ.க்களின் நம்பிக்கையை இழந்திருப்பது அந்தக்கூட்டத்தில் நன்கு வெளிப்பட்டது.

இந்த நிலைமையிலும் திரிபாதி ராஜினுமா செய்ய முடியாது என்று அறிக்கை விட்டிருப்பதற்குக் காரணம் தனக்கு மேலிடத்தின் ஆதரவு இருக்கிறது என்ற இறுமாப்பேயாகும்.

அடுத்த ஆண்டு தேர்தலைச் சந்திக்க திரிபாதி அமைச்சரவை சக்தியற்றிருப்பதாக காங்கிரஸ் ஆதரவு ஏடுகளே எழுதுகின்றன.

இந்த நிலைமையிலும் திரிபாதிக்கு காங்கிரஸ் மேலிடம முட்டுக்கொடுப்பதற்குக் காரணம் என்ன?

இந்திராவின் நம்பிக்கையைப்பெற்றவர்கள் மட்டுமே பதவியிலிருக்க முடியும் என்ற கோட்பாடே காங்கிரசின் தலையாய கோட்பாடாக இருக்கிறது. தங்கள் தலைவரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் உரிமையை காங்கிரஸ் எம. எல். ஏக்களுக்குக் கூட அளிக்க காங்கிரஸ் மேலிடம் தயாராக இல்லை.

இந்த நிலையில் ஜனநாயக முறையில் ஆட்சி நடைபெற காங்கிரஸ் மற்ற கட்சிகளுக்கு எந்த உரிமையும் வழங்கும் என்று எதிர்பார்க்க முடியுமா?

## அரசு போக்குவரத்து ஊழியர் 150 பேர் தர்ணா

சென்னை, ஜூன். 4—

தமிழ்நாடு அரசாங்கப் போக்குவரத்து ஊழியர்கள் முக்கியமான கோரிக்கைகளை முன வைத்துப் போராட்டம் நடத்தி வருகிறார்கள்.

வெளியூர் இடமாற்றம் கோரியும், பிராவிடெண்டு நிதிக்கு பாஸ் புத்தகம் கேட்டும், அநியாய ஸ்டாண்டிங் ஆர்டர்களை வாபஸ் பெறக் கோரியும் போராட்டம் நடத்துகிறார்கள்.

### தர்ணா

அரசாங்கப் போக்குவரத்து ஊழியர் சங்கத்தினர் 1-6-73ல் போக்குவரத்து இல்லம் முன ஒரு நாள் தர்ணா போராட்டம் நடத்தினார்கள். தொழிலாளர் தலைவர். கே. எம். ஹரிபட் தர்ணாவைத் துவக்கி வைத்தார.

சங்க உதவித் தலைவர் தோழர்.பூ. மூர்த்தி தலைமை தாங்கினர். இந்த தர்ணா போராடடத்தில் 150 தொழிலாளர்கள் கலந்து கொண்டனர்.

தொழிலாளர்களின் கோரிக்கைகளையும் அவர்களின் நியாயமானபோராட்டத்தையும் ஆதரித்து, தொழிலாளர் தலைவர்கள் மைதிலி சிவராமன், பி. ஜி. கிருஷ்ணன், மீனுட்சி சுந்தரம், செளந்தரராஜன், பாஸ்கரன், ராகவன் ஆகியோர் பேசினார்கள். தர்ணா போராட்டம் வெற்றிகரமாக நடைபெற்றது.

## நன்கொடை என்ற பெயரில் நடைபெறும் வசூல்

### அரசு எச்சரிக்கை போதுமா?

திருச்சி, ஜூன். 2—

அரசு உதவிபெறும் சில கல்லூரிகள் நிர்வாகங்கள், 'நன்கொடை' என்ற பெயரில் அங்கீகாரமற்ற முறையில் ஏராளமான பணத்தை வசூல் செய்வதை ஒழிக்க அரசு உதவிபெறும்கல்லூரிகளின் தாளளார்களுக்கு சில உத்தரவுகளை அரசு பிறப்பித்துள்ளது.

தமிழ்நாட்டில் 127 அரசு உதவி பெறும் கலைக்கல்லூரிகளும் தனியார் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிகளும் உடற்பயிற்சி, கீழ்த்திசை கல்லூரிகளும் உள்ளன. கல்லூரிகளில் இட நெருக்கடியை பயன் படுத்திக்கொண்டு, கல்லூரிகளின் அபிவிருத்தி திட்டங்களுக்காக என்ற பெயரில் சேரவரும் மாணவர்களிமிருந்தோ அல்லது பெற்றோர்களிடமிருந்தோ பணம் வசூலிக்கப்படுவது பற்றி அரசின் கவனத்திற்கு வந்திருப்பதாலேயே இந்த உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன.

### முறையான கணக்கு கிடையாது

நன்கொடை தருபவர்களுக்கு இடம் என்ற ரீதியில் வசூலிக்கப்படும இத்தொகைக்கு முறையான கணக்கும் இல்லை. ஆகவே, மாணவர்களைச் சேர்க்கும் சமயத்திலோ, கல்லூரி திறப்பதற்கு அல்லது கல்லூரி திறந்த 3 மாத காலம் வரையிலோ நன்கொடை வசூலிக்கக் கூடாது. அம்மாதிரி இந்தக் காலததில் வசூலிககபபடும் தொகை கட்டாயத்தின் பேரில் வசூலிக்கப்பட்டதாகவே கருதப்படும் என்று அரசு எச்சரித்துள்ளது.

அரசு உத்தரவு மேலும் கூறுவதாவது:—

வசூல் அல்லது நன்கொடைகள் கண்டிப்பாக சுயமான அடிப்படையில் இருக்கவேண்டும். இதில நேரடியாக அல்லது மறைமுகமான நிர்ப்பந்தம் எதுவும் கூடாது.

ஒரு குறிப்பிட்ட ஆண்டில, குறிபபிட்ட காரியதிற்காகவே பணம வசூலிக்கப்படவேண்டும. இதை நிரந்தர வழக்கமாகக் கொள்ளக கூடாது.

உதவி நிகழ்ச்சிகளுக்காக டிக்கெட்டுகளை விற்பதன் மூலம் பணம் திரட்டித் தருமாறு மாணவர்களை நேரடியாகவோ மறைமுகமாகவோ ஈடுபடுத்தக்கூடாது

ஆசிரியர்கள், இதர ஊழியர்கள் யாரிடமிருந்தும், அவர்களது உத்தியோக நியமனத்தின் போதோ சர்வீஸ் காலத்திலோ எவ்வித தொகையும வசூலிக்கக் கூடாது. இம்மாதிரி நன்கொடைகளுக்காக அவர்களது சம்பளத்தில் பிடித்தம் செய்யக் கூடாது.

நன்கொடை தருவோருக்கு, அச்சடித்த,தொடர்ச்சியாக நம்பர்களை கொண்ட முறையான ரசீதுகளைக் வழங்கவேண்டும்.

### தனிக் கணக்கு காட்ட வேண்டும்

கல்லூரிகளில் விசேஷ கட்டணங்கள் வசூலிபபது போல, இம்மாதிரி வசூலிக்கப்படும் தொகைக்கும் தனியாக கணக்குகள் வைத்திருக்க வேண்டும். இத்தொகை கல்லூரியின் நிதி அறிக்கைகளிலும் காட்டப்படவேண்டும்.

அறக்கட்டளைகள், சந்தாக்கள்,சுயமாக தரும் நன்கொடைகள், தனிப்பட்ட முறையில் வசூலிக்கப்படும் தொகைகள் ஆகிய பலவிதமான வசூல் தொகையும் கணக்கில் காட்டப்படவேண்டும். இம்மாதிரி சுயமாக வசூலிக்கப்படும் தொகைகள் அல்லது நன்கொடைகளை கல்லூரி பொது நிதியுடன் சேர்க்கக் கூடாது.

குறிப்பிட்ட காரியத்துக்காக வசூலிக்கப்பட்ட நன்கொடைத்தொகை முறைப்படி பயன்படுத்தப்பட்ட விவரம் கல்லூரி கல்வி டைரக்டர் குறிப்பிடும் தேதிக்குள் அவருக்குஅனுப்பவைக்கப்படவேண்டும்.

இந்த நிபந்தனைகளில் ஒன்றோ அல்லது அனைத்துமோ மீறப்பட்டால் அப்படி மீறும் கல்லூரிக்கு அளிக்கப்படும் மான்யத் தொகையில் ஒரு பகுதியையோ அல்லது முழுவதையுமோ கல்லூரி கல்வி டைரக்டர் நிறுத்திவைக்கலாம். இது விஷயத்தில் அவரது முடிவே இறுதியானது,

### முதலாளித்துவம் என்றால் என்ன?

10 கோடி ரூபாய்க்கு மேலான மதிப்புள்ள நூல்கள் தேங்கிக்கிடக்கின்றன— என்று, கோவை மில் அதிபர்கள் கூறுகிறார்கள்.

அதே சமயத்தில்......

நூல் கிடைக்காத காரணத்தால், கைத்தறிகளும், விசைத் தறிகளும் மாதக் கணக்கில் நின்று போய்விட்டன.

அதன் விளைவாக......

ஆயிரமாயிரம் கைத்தறி, விசைத்தறி தொழிலாளர்கள் வேலையின்றி, பட்டினியால் வாடுகிறார்கள்.

ஒரு பக்கம் நூல் தேக்கம்...... மறு பக்கம் நூல் கிடைக்கவில்லை.

முதலாளித்துவம் என்பது இதுதான்.

### பீகாரில்

## முதலமைச்சரின் காலைவார கையெழுத்து வேட்டை

### எதிர்ப்பு கோஷ்டி தீவிரம்

பாட்னு, ஜூன். 1—

பீகாரில் இ. காங்கிரஸ் முதலமைச்சர் கேதார் பாண்டேயைப் பதவியில் இருந்து துரத்துவதற்காக, இ. காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த சட்டமன்ற உறுபபினர்களும், பதவியிலிருந்து நீக்கப்பட்ட முன்னள் அமைச்சர்களும வரிந்து கட்டிக்கொண்டு கையெழுதது வேட்டையில் இறங்கியுள்ளனர்.

பீகார் அமைச்சரவையில் 4, 5 தினங்களுக்கு முனனர்தான பிளவு ஏற்பட்டது. தமக்குப் பிடிக்காத 7 அமைச்சர்களை முதலமைச்சர் கேதார்பாண்டே பதவியிலிருந்து விலக்கினர். பின்னர் அந்த அவர்களில் இருவரை மட்டும் அமைச்சரவையில் மறுபடியும் சேர்த்துக்கொண்டு புதிய அமைச்சரவையை அமைத்தார்.

கோஷ்டிப் பூசலைத் தடுப்பதற்காக— 37 பேர் கொண்ட அமைச்சரவையில் மேலும் மூவருக்கு அமைச்சர் பதவி கொடுத்து—40 பேர் கொண்ட பெரிய அமைச்சரவையை ஏற்படுத்தி— தனது பதவியைக் காப்பாற்றிக்கொள்ள கேதார்பாண்டே முயற்சி செய்தார்.

### மறுபடியும் மண்டை வலி

ஆனல் இப்போது மறுபடியும் முதலமைச்சருக்கு எதிராக விலக்சப்பட்ட அமைச்சர்களும் சட்டமன்ற இ. காங்கிரஸ் உறுப்பினர்களும் முண்டா தட்டிக்கொண்டு கிளம்பி விட்டார்கள்.

எதிர்ப்புக் கோஷ்டியினர் மே. 30-ந் தேதியன்று ஒரு கூட்டம் நடத்தினர்கள். இதில் இ.காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர்களும் சில அமைச்சர்களும் கலந்து கொண்டனர்.

"விலக்கப்பட்ட அமைச்சர்களில் பெரும்பாலோருக்கு மீண்டும் அமைச்சர் பதவி கொடுக்கப்பட்டிருக்கிறது. இதனல் முதலமைச்சர் பதவியில் நீடிக்கும் தகுதியை கேதார் பாண்டே இழந்து விட்டார். அவரை நீக்கக் கோரி கையெழுத்து இயக்கம் நடத்தி வருகிறோம்" என்று எதிர்ப்புக் கோஷ்டியைச் சேர்ந்த சட்டமன்ற உறுப்பினர் வீரேந்திரகுமார் கூறினர்.

அவர் மேலும் கூறும் போது:

பீகார் சட்டமன்றத்தில் உள்ள 180 இந்திரா காங்கிரஸ் உறுப்பினர்களில் 140 பேர் முதலமைசருக்கு எதிராக கையெழுத்துப் போடுவார்கள் என்றும் ஏற்கனவே 65 பேர் கையெழுத்துப் போட்டு விட்டார்கள் என்றும் கூறினர்.

இ. காங்கிரஸ் மேலிடம் முதலமைச்சர் கேதார் பாண்டேயை பதவியிலிருந்து நீக்காவிட்டால்எதிர்ப்புக் கோஷ்டியினர் அனைவரும் இ. காங்கிரசிலிருந்து கூண்டோடு ராஜினுமா செய்து விடப் போவதாகவும் வீரேந்திர் குமார் எச்சரித்துள்ளார்.




### ஆயிரக்கணக்கான பேரை

## வேலையிழக்கச் செய்யும் அரசின் நடவடிக்கை

ஐயா,

தமிழகத்தில் மாநில கூட்டுறவு விற்பனை கழகம் மூலமும், மாவட்ட ஆட்சித் தலைவரின் நேரடி உத்திரவுகள் மூலமும் கூட்டுறவுதாலுகா சங்கங்கள்மூலமுமாககிராம கூட்டுறவு சங்கங்களுக்கு உரங்கள் வினியோகிக்கபபட்டு கிராம விவசாயிகளுக்கு வினியோகிக்கப் வந்தது.

திடீர் என அரசு ஜி. ஓ. எண 184, 9—5—73 -தேதி உத்திரவின்படி உர வினியோக முறையில் மாற்றம் செய்யபபட்டு மாநில கூட்டுறவு விற்பனை கழகம் நேரடியாக கிராம கூட்டுறவு விற்பனைச்சங்கங்கள் மூலம் உரவினியோகம செய்ய முடிவு செய்யப்பட்டுள்ளது. இதனல், இதுகாரும் இத்துறையில் பணியாற்றிவந்த தாலுகா கூட்டுறவு விற்பனை கழக ஊழியாகள் ஆயிரக் கணக்கானோர் வேலையிழக்கும் அபாயம ஏற்பட்டுள்ளது.

உர வினியோகப் பொறுப்பை மாநில கூட்டுறவு விற்பனை கழகம் நேரடி பொறுப்பில் எடுத்துள்ளதால் பாதிப்புக்குள்ளாகும் தாலுகா கூட்டுறவு விற்பனை சங்க ஊழியர்கள் அனைவரையும் மாநில கூட்டுறவு விற்பனை கழகத்தில் இணைத்து வேலைப் பாதுகாப்பு வழங்கவேண்டுமாய் மாநில கூட்டுறவுத் துறை அமைச்சர்களுக்கும், சம்பந்தப்பட்ட மாநில கூட்டுறவு துறை அதிகாரிகளுக்கும் தமிழக கூட்டுறவு சங்க ஊழியர்கள் சங்கத்தின் சார்பில் மகஜர்களும் கடிதங்களும் அனுப்பப்பட்டுள்ளது.

பாதிப்புக்கு உள்ளாகும் ஆயிரக்கணக்கான சிப்பந்திகளுக்குவேலைப்பாதுகாப்பு அளிக்க அரசும், சமபந்தப்பட்ட அதிகாரிகளும துரித நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டுமாய் கேட்டுக் கொள்கிறேன்.

இப்படிக்கு,
கே. வாசுதேவன்,
செயலாளர்,
தமிழக கூட்டுறவு சங்க ஊழியர்கள் சங்கம்,
மதுரை.

## பீகார் முதலமைச்சர் மீது ஊழல்குற்றச்சாட்டு

### பிரதம மந்திரிக்கு காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள் மகஜர்

பாட்னு. ஜூன். 1—

பீகார் முதலமைச்சர் கேதார் பாண்டே மீது லஞ்ச ஊழல் குற்றச்சாட்டுகள் அடங்கிய மகஜரை வெகுவிரைவில் பிரதம மந்திரி இந்திரா காந்தியிடம் கொடுக்கப்போவதாக காங்கிரஸ் எம். எல். ஏ. யான வீரேந்திர குமார் பாண்டே முந்தாநாள் இங்கு பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில் அறிவித்தார்.

இந்த மகஜரில் 150 காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள் கையெழுத்திடுவர் என்றும் அவர் அறிவித்தார்.

பீகாரில் ஆட்சித் தலைமையை காங்கிரஸ் மேலிடம் மாற்றாவிட்டால் விளைவு பயங்கரமாக இருக்கும் என்றும் அவர் பகிரங்க எச்சரிக்கை விடுத்தார்,

## கொச்சி மேயர் தேர்தல் ஒத்திவைப்பு

### உறுப்பினர்களை மிரட்டி ஓட்டுப்போட வைக்கும் முயற்சி தோல்வி

கொச்சி, ஜூன். 1—

கொச்சி மாநகராட்சி மேயர் தேர்தலில் குழப்பம் ஏற்பட்டதால் இன்று நடைபெற முடியவில்லை. தேர்தல் பின்னெரு தேதிக்கு ஒத்திவைக்கப்பட்டது.

மேயர் பதவிக்கு ஆளும் கூட்டணி சார்பில் ஹம்சா குஞ்சு போட்டியிட்டார். மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சுயேட்சை வேட்பாளர் ஏ. கே. சேஷாத்திரிக்கு ஆதரவளித்தது.

துணை மேயர் அப்துல் காதர் தேர்தலை நடத்தினர்.

வாக்குச் சீட்டில் முத்திரை குத்திய பின்னர், வாக்குப் பெட்டியில் போடுவதற்கு முன்பாக வாக்குச் சீட்டை தன்னிடம் காட்ட வேண்டும் என்று துணை மேயர் உத்திரவு போட்டார்.

ரகசியத் தேர்தல் முறைக்கு விரோதமான இந்த உத்திரவை எதிர் கட்சி உறுப்பினர்கள் கடுமையாக ஆட்சேபித்தனர்.

வாக்குப் பதிவு ஆரம்பமானதும் ஒரு உறுப்பினர் தன்னுடைய வாக்குச் சீட்டில் முத்திரையிட்டபின் துணை மேயரிடம் காட்டினர்.

இதனல் குழப்பம் ஏற்பட்டது. பலர் மேடை மீது ஏறினர். வாக்குச் சீட்டுகள் பிடுங்கி எறியப்பட்டன.

கடைசியில் தேர் தலை நடத்தும் பொறுப்பிலிருந்த துணை மேயர் தேர்தலையே ஒத்திவைப்பதாக அறிவித்தார்.

### சேலம்

## ஜனநாயக மாதர் மாநாட்டு நிகழ்ச்சிகள்

சேலம், ஜூன் 3—

சேலம் நகரத்தைச் சார்ந்த தாதகாப்பட்டியில் மே22ந்தேதிகோலாகலமாக நடந்த ஜனநாயக மாதர் சங்க மாநாட்டில், நகரின் பல்வேறு பகுதியிலிருந்து பெண்கள் கலந்து கொண்டனர். ஆரம்ப முயற்சியாக இருப்பினும் சிறப்பாக நடைபெற்றது. அடுத்த ஆண்டிற்குள்ளாக நகரில் எல்லா பகுதிகளிலும்மாதர் சங்க கிளைகளை ஆரம்பித்து அங்கத்தினர்களை சேர்த்து விரிவான மாநாடு நடத்த முடிவு செய்யப்பட்டது.

இந்த மாநாட்டிற்காக தாதகாப்பட்டி மாதர் சங்க நிர்வாகக்குழு பெண்கள் மிகத்தீவிரமாக ஈடுபட்டனர். கந்தாயி ரெங்கசாமியின் தலைமையில் வீடு வீடாகச்சென்று ரூ.600-க்கு மேல் மாநாட்டுக்காக வசூலித்தனர். இந்த பெண்களின் விடாமுயற்சி மிகவும் பாராட்டத்தககது. இவர்களதுஊக்கத்தையும் முயற்சியும், சுறு சுறுப்பையும் காணும்போது சேலம் நகரில்மாதாசங்கத்திற்கு நல்ல எதிர்காலம்உண்டுஎன்றநம்பிக்கை ஏற்படுகிறது. இயக்கத்திற்கு புதிய பெண்கள் என்றாலும் மேடையில் ஏறி பேசினர்.

தோழர் பாப்பா உமாநாத் பேசுவதற்கு முன் ஒரு தோழரின் ஆண்குழந்தைக்கு ராமமூர்த்தி என்று பெயர் சூட்டினர். மாநாட்டில் பாப்பா உமாநாத்தின் இரு புதல்விகளும் பேசினர்.

### உமாநாத் புதல்வியர் பேச்சு

மூத்த மகள் கண்ணமா (லெட்சுமி நேத்ராவதி) பேசுகையில், "மணிப்பாலில் மருத்துவ கல்லூரியில் 2-ம் ஆண்டு படித்துக்கொண்டிருக்கிறேன். விடுமுறையில் வந்துள்ள நேரத்தில் உங்கள்மாநாட்டில்பேசவாய்ப்பு கிடைத்தது குறித்து மகிழ்ச்சியடைகிறேன். பெண்கள் அரசியல் இயக்கத்தில் பங்கெடுப்பது அவசியம் மட்டுமல்ல. அது புரட்சித்தேவையாகும். மக்கட் தொகையில் செம்பாதியாக உள்ள பெண்கள் அரசியல் இயக்கத்தில் ஈடுபடாமல் புரட்சி வெற்றி பெற முடியாது. வியட்நாமில் மகத்தான சாதனை புரிந்த வீரப்பெண்கள் ஏராளம். அடுப்பங்கரையில் அவதிப்பட்ட அந்தப் பெண்கள் துப்பாக்கி ஏந்தி அமெரிக்க ஏகாதிபத்ய துருப்புகளை மண் கவ்வச் செய்கின்றனர். பெண்கள் ஒடுக்கு முறையிலிருந்து விடுதலை பெற்றதும், சமுதாயத்தில் சமத்துவமாக வாழ்ந்து வருவதற்கும் காரணம் சோஷலிச அமைப்பு தான். இப்படியொரு அமைப்பை ஏற்படுத்த ஜனநாயக மாதர்சங்கம் தனது கடமையை ஆற்றுமென நம்புகிறேன்" என்று குறிப்பிட்டார்.

### ஆற்றவேண்டிய கடமைகள்

அடுத்து பேசிய செல்வி வாசுகி உமாநாத், திண்டுக்கல் தேர்தலில் படுதோல்வி கண்ட கருணாநிதி அரசு ராஜினுமா செய்து மறுதேர்தலை எதிர் நோக்க வேண்டுமெனவும், திண்டுக்கல் தந்த சிறப்பான தீர்ப்புக்கு மையமாக இருந்தவர்கள் பெண்கள் என்றும், பெண்களிடையே அரசியல்உணர்வு ஏற்பட்டால் அதுமகத்தான சக்தியாக விளங்கும் என்றும்,ஜனநாயக மாதர் சங்க அமைப்பை மாநிலம் முழுவதும் விரிவுப்படுத்தி மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டுக் கட்சியின் மாதர் பிரிவாகவிளங்க ஏற்பாடு செய்வதுஅவசியம் என்றும், அதற்காக நம கட்சித் தோழர்கள் தங்கள் வீட்டுப் பிள்ளைகளை மாதர் சங்கத்துக்கும், பிள்ளைகளை மாணவர் சங்கத்திற்கும் அனுப்ப வேண்டுமென்றும் பொதுக் கூட்டங்களுக்கு வரும்போது தங்கள் வீட்டுப் பெண்களையும், மக்களையும் அழைத்துவரும் பழக்கத்தையும் கடைப்பிடிப்பது அவசியமென்றும் கூறி, மாநாட்டில் சிறியவளான நான் பேச வாய்ப்பு கொடுத்தமைக்கு நன்றி கூறி முடிக்கிறேன்" எனகுறிப்பிட்டார். தோழர். அர்த்தனுரியின் புதல்வி அருள் தீர்மானங்களை வாசித்தார்.

மாநாட்டின் பொது நிகழ்ச்சியாக மாலையில் நடந்த மாபெரும் பொதுக் கூட்டத்தில் திருமதி கந்தாயி ரெங்கசாமி தலைமையில் தோழர் பாப்பா உமாநாத் 'திண்டுக்கல் தீர்ப்பும் தொடர்ந்த கடமைகளும்" என்பது பற்றி விரிவாகப் பேசினர்.

கூட்டத்தில் அர்த்தனுரி, ரெங்கசாமி மற்றும் பல தோழர்களும் பேசினர்கள். இறுதியில் கந்தாயி ரெங்கசாமி நன்றி கூறவே மாநாடு நிறைவு பெற்றது.

## சுமித்ராவுக்கு டாக்சி கட்டணம்

பெங்களூர், ஜூன் 1—

மைசூர்முன்னுள் அமைச்சர் கிட்டூர் விவகாரத்தில் சம்பந்தப்பட்டுள்ள குமாரி சுமித்ரா தேசாயை மே 18-ம் தேதியன்று அமைச்சர் வீட்டிலிருந்து ஆஷா நிகேதன் என்ற ஆசிரமத்துக்குக் கொண்டுசெல்லுவதற்கான டாக்சி கட்டணத்தை போலீஸ் ஏற்றிருப்பதாக இப்போது ஊர்ஜிதம் செய்யப்படுகிறது. சுமித்ரா தேசாயை கொண்டுசெல்லுவதற்கு ரூ 25 கொடுக்கப்பட்டதாகவும் அறிவிக்கப்படுகிறது.

ஆஷா நிகேதனிலிருந்து மறுநாள் சுமித்ரா தேசாய் காணாமல் போய்விட்டார்.

இதுவரை போலீஸ் அவரைத் தேடிப் பிடிக்கவில்லை.

### அலட்சியம் ஏன்?

சுமித்ரா தேசாய் இருக்கும் இடம் போலீசுக்குத் தெரியும் என்றும், ஆனல் அதை வெளிப்படுத்தப் போலீஸ் தயாராக இல்லை என்றும் மைசூர் மேலவையில் எதிர்கட்சித் தலைவரான ராமகிருஷ்ண ஹெக்டே குற்றம் சாட்டியுள்ளார்.

சுமித்ராவைக் கண்டு பிடிப்பதிலும் அல்லது அவர் மறைந்து போவதற்கு பொறுப்பாக இருந்தவர்களை பிடிப்பதிலும் ஏன் அரசு அலட்சியம் காட்டுகிறது என்றும்அவர்கேள்வி எழுப்பியுள்ளார்.

சுமித்ராவின் படத்தைப் பத்திரிகைகளுக்கு வினியோகித்து விட்டுப்பின்னர் ஏன் அவற்றை போலீஸ் அதிகாரிகள் திரும்பப்பெற வேண்டும் என்றும் அவர் கேள்வி கேட்டுள்ளார்.

## மார்க்சிஸ்ட் கட்சிக்கு அ.தி.மு.க வழக்கறிஞர்கள் மன்றம் நன்றி

சென்னை, ஜூன். 1—

திண்டுக்கல் தொகுதி உப-தேர்தலின் போது தி. மு. க. வினர் கட்டவிழ்த்து விட்ட வன்முறையை எதிர்த்துநின்று, அ. தி. மு. க. வேட்பாளரின் வெற்றிக்குப் பாடுபட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்சி ஊழியர்களுக்கும், தலைவர்களுக்கும் நன்றிதெரிவித்து அண்ணா தி. மு. க. உயர் நீதிமன்ற வழக்கறிஞர்கள் மன்றம் அறிக்கை விடுத்துள்ளது.

அந்த அறிக்கையில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த ஊழியர்கள் உயிரையே திரணை மதித்து, வன்முறையை எதிர்த்து நின்றதற்கும் அ. தி. மு. க. வேட்பாளர் வெற்றிக்குப் பாடுபட்டதற்கும் நன்றி தெரிவிப்பதாக மன்றத்தின் தலைவர் கு. வடிவேலு, செயலாளர் மு. கற்பகவினயகமும் கூறியுள்ளனர்.

# சி. ஐ. டி. யூ. 3வது ஆண்டு விழா

## பேசின் பிரிட்ஜ் தொழிலாளர்கள் சிறப்பாகக் கொண்டாடினர்

சென்னை, ஜுன். 1—

இந்திய தொழிலாளி வர்க்கத்தின் விடுதலைக்காக தெளிவான அரசியல் பார்வையோடு முதலாளிகளையும், முதலாளித்துவத்திற்கு ஆதரவான அரசாங்கத்தையும், வர்க்க சமரசவாதிகளையும் முன்னுக்குப்பின் முரணற்ற முறையில் எதிர்த்து போராடிக்கொண்டிருக்கக்கூடிய இந்திய தொழிற்சங்க மையத்தின் (சி.ஐ.டி.யூ.) மூன்ருமாண்டு நிறுவன தின விழா பேசின் பிரிட்ஜ்பவர்ஹவுஸ் நிலக்கரி தொழிலாளர்களின் சார்பாக சென்னை மாநில பொதுத் தொழிலாளர் சங்கம் சிறப்பாக கொண்டாடியது.

பவர்ஹவுஸ் வாயிலில் புதிய சி. ஐ. டி. யூ கொடி ஏற்றப்பட்டும், வண்ண விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டும்ஜோடனைசெய்யப்பட்டிருந்தது.

பவர்ஹவுஸ் வாயிலில் மாலேமணிக்குநடைபெற்ற சிறப்பான கூட்டத்தை பகுதிச்செயலாளர் தோழர் ராஜு ஆரபித்துவைத்தார். கூட்டத்திற்கு சென்னை மாநில பொதுத் தொழிலாளர் சங்கத்தின் உதவிச் செயலாளர் தோழர் கண்ணன் தலைமைவகித்தார்.

அவர் பேசும்போது:—

மின்சாரத் தொழிலாளர்களையெல்லாம் மின்சார வாரியத்தின்நிரந்தர ஊழியர்களாக்க வேண்டுமென்பதற்காக, காண்ட்ராக்ட் முறையை எதிர்த்து சி. ஐ. டி. யூ, மின்சார வாரியத்திற்கு வேலை நிறுத்த நோட்டீஸ் கொடுத்திருக்கிறது.

### அடக்குமுறையை எதிர்ப்போம்

சங்கம் எதிர் நோக்கியிருக்கக்கூடிய போராட்டமானது கடுமையானது. அரசாங்கத்தின கொள்கைக்கெதிராக அரசையும் மின்வாரியத்தையும் நிர்பந்தித்து நடத்தக்கூடிய போராட்டமாகும்.

சி. ஐ. டி. யூ. நடத்தும் போராட்டத்தை உடைப்பதற்கு பல்வேறுவிதமான சக்திகளும் தூண்டிவிடப்படும்.

தொழிலாளர்கள் தினம், தினம் செத்துப் பிழைக்கக்கூடிய இந்த மோசமான வாழ்க்கையை தொடர்ந்து நடத்திக் கொண்டிருக்க முடியாது. ஆகவே எப்படிப்பட்ட அடக்குமுறைகள் வந்தபோதிலும் அதை கண்டு அஞ்சாது உறுதியாக சமாளித்து சி ஐ.டி யூ. காட்டும் புரட்சிப் பாதையிலே போராடத்தயாராகுங்கள்" என்று தலைமையுரையில் கூறினர்.

### "ஒன்றுபடு, போராடு"

அடுத்து இந்திய மாணவர் சங்கத்தின் சார்பாக தோழர் சத்துரு பேசி முடிந்தபின், அரசாங்க போக்குவரத்து ஊழியர் சங்கத்தின் (சி. ஐ. டி. யூ) உதவிச் செயலாளர்தோழர் சௌந்திரராஜன் பேசும்போது குறிப்பிட்டதாவது:-

இந்தியதொழிலாளி வர்க்கத்தின் உரிமைக்காகப் போராடக்கூடிய சி. ஐ. டி. யூ. வின் தெளிவானகொள்கையால்ஆகர்ஷிக்கப்பட்டு, இந்தியாவில் உள்ள சகல பகுதி தொழிலாளிகளும் சி. ஐ.டி.யூ. வைச் நோக்கிவந்து கொண்டிருக்கிருர்கள். சி. ஐ. டி. யூ. முன் வைத்த கோஷமான "ஒன்றுபடு, போராடு" என்றகொள்கை உழைப்பாளிகளிடையே ஒரு பிரமாண்டமான எழுச்சியை உண்டுபண்ணியிருக்கிறது.

இன்று தொழிலாளர்கள் மட்டுமில்லாது விவசாயிகளும், மாணவர்களும், போலீசாரும் போராடுகின்றனர். அதைத்தான் நாம் உத்திரப் பிரதேசத்திலே இன்றைக்கு பாரகிறோம். உத்திர பிரதேசத்திலே நடந்தது என்ன?

### போலீசாரின் வாழ்க்கை நிலை

நேற்றுவரை போராடக்கூடிய தொழிலாளர்களையும் மாணவர்களையும் துப்பாக்கி கொண்டும், குண்டாந்தடிகளை கொண்டும் தாக்கிக் கொண்டிருந்த போலீசார் இன்று அங்கே அரசாங்கத்தை எதிர்த்து மாணவர்களுடன் இணைந்து கொண்டு—போலீஸ்-மாணவர் ஒற்றுமை ஓங்குக" என்று கோஷமிட்டு கொண்டே லக்னோவின் வீதிகளிலே வலம் வந்தார்கள். உடனே "சோசலிச மாதா" இந்திரா காந்தி என்ன செய்தார். தன்னுடைய ராணுவத்தை அனுப்பி 34 பேர்களின் உயிரைபலிவாங்கிபோராட்டத்தை முறியடித்திருக்கிருர். சாதாரண போலீஸ்காரரின் வாழ்க்கை நிலை மிக,மிக மோசமானது. ஒரு போலீஸ்காரரின்மாதச் சம்பளம் தொன்னூறு ரூபாய் ஆனல் அவர் கையிலே பிடித்து கொண்டு போககூடிய நாய்க்கு ஆகும் செலவு முன்னூறு ரூபாய்.

இப்படி சகல பகுதி தொழிலாளர்களும் போராடக்கூடிய நேரத்தில் தான் அரசாங்கம் கிராமப் புறத்திலே இருக்கக்கூடிய ஏழை மக்களுக்காக பரிதாபப்படுவதுபோல் நடித்து நீலிக்கண்ணீர் வடிக்கிறது. நகர்ப்புறங்களிலே இருக்கக்கூடிய தொழிலாளர்கள் போராடி மேலும், மேலும் சம்பள உயர்வு வாங்குகின்ற காரணத்தால்தான் விலைவாசிஉயருகிறது உங்களுக்கெல்லாம் எதுவும் செய்ய இயலவில்லை என்று விஷமப் பிரச்சாரம் செய்கிறது. தங்களுடைய வரிவிதிப்பினலும், சூனியமான கொள்கைகளாலும் ஏற்படும் நெருக்கடியை மூடி மறைக்க முயலுகிறது அரசாங்கம். நம்முடைய சகோதரர்களை நமக்கெதிராக திருப்பிவிட முயற்சிக்கிறது. இதை எதிர்த்து நாம் கடுமையான போராட்டத்தை நடத்தியாக வேண்டும். போராடினலொழிய வெற்றி பெறுவதென்பது சாத்தியமானதல்ல. நாம் நம்முடைய வாழ்க்கை நிலையை ஓரளவு உயர்த்திக் கொள்ளுவதற்கு சம்பளத்திற்காகவும், போனசிற்காக போராடுவதோடு மட்டுமில்லாது, தொழிலாளி வர்க்க அரசை இந்நாட்டிலே நிறுவவேண்டும் என்ற லட்சிய நோக்கத்தோடு முதலாளி வர்க்க அரசியலை எதிர்த்து, சி. ஐ. டி. யூ. காட்டும் பாதையிலே போராடத்தயாராக வேண்டும் என்று கூறி முடித்தார். சி. ஐ. டி. யூ. வாழ்க! தொழிலாளர் ஒற்றுமை ஓங்குக! என்ற கோஷத்துடன் விழா இனிது முடிந்தது.

# மந்திரி நிர்ப்பந்தமே ஊழலுக்கு காரணம்

## மைசூர் சட்டசபை கமிட்டி புகார்

பெங்களூர், ஜூன். 2—

மைசூர் விவசாய-தொழிற்சாலை கார்ப்பரேஷன் தலைவரையும், இதர அதிகாரிகளையும் விவசாய, வனத்துறைஅமைச்சர்திரு. கே.எச் பாடில்நிர்ப்பந்தித்து, பல நிர்வாக ஊழல்கள் புரியச் செய்திருப்பதாக மேல் சபையின் இன்று தாக்கலான அரசு நிறுவனங்கள் பற்றிய சட்டசபை பரிசீலனைக் கமிட்டி அறிக்கையில் குற்றம் சாட்டப்பட்டுள்ளது.

இந்த அறிக்கையை, கமிட்டித் தலைவர் திரு. பாஸ்கரஷெட்டி எம். எல். ஏ, சபாநாயகர் திருமதி நாகரத்தினம்மாளிடம் அவரது இல்லத்தில் இன்று பிற்பகல் அளித்தார்.

### அமைச்சரின் நிர்ப்பந்தம்

ஒரு கடிதத்தில் முன் தேதியிடப்பட்டிருந்தது. ரிகார்டுகள் போலியாக தயாரிக்கப்பட்டன நியாய மற்றவை என்று தெளிவாக தெரிந்திருந்தும், அவற்றை நியாயமானதாக்க கார்ப்பரேஷன் அதிகாரிகளையும், ஊழியர்களையும் நிர்ப்பந்திக்க முயற்சிகள் நடந்துள்ளன என்று அறிக்கை கூறுகிறது. விவசாய அமைச்சர் டெலிபோன்மூலமாகவே அல்லது வாய் மொழியாகவோ கூறியவை அவர் உத்தர விடுவதாகவே கருதப்பட்டு, கார்ப்பரேஷன் அதிகாரிகள் தங்கள் பொறுப்பை உணராமல் பல தவறுகளை இழைக்க நேரிட்டிருக்கிறது என்பதையும் இந்த அறிக்கை புலப்படுத்தியுள்ளது.

கார்ப்பரேஷன் டைரக்டர்கள் போர்டு மீது இக் கமிட்டி கண்டனங்களை தெரிவித்திருப்பதுடன், இப்போதைய இந்தபோர்டு, ராஜ்யத்தின் முக்கியமான அரசுத்துறை நிறுவனம் விஷயத்தில் தனது பொறுப்பை நிறைவேற்றத் தவறிவிட்டது என்ற எண்ணமே தங்களுக்கு ஏற்பட்டிருப்பதாக கமிட்டி கூறியது.

### கார்ப்பரேஷன் நலனில் அக்கறையில்லை

முக்கிய முடிவுகள் எடுக்கும் விஷயத்தில் டைரக்டர்கள் போர்டு லட்சிய பூர்வமான நியாயமான நிலையை மேற்கொள்ளவில்லை. அவர்களது நடவடிக்கைகளிலிருந்து, கார்ப்பரேஷன் நலனைவிட, அதற்கு வெளியே உள்ளவர்களது நலனுக்காகவே அதிகம செயல்பட்டிருக்க வேண்டும் என்ற சந்தேகத்தையும் ஏற்படுத்தியுள்ளதாக கமிட்டி அறிக்கைகூறியது.

ஹல் கோட்டையில் உள்ள கடக கூட்டுறவு ஜவுளி மில்லுக்கும், தாவன கெரே சர்க்கரை ஆலைக்கும் இடையே நடந்த சில வர்த்தக பேரங்களை ஆராய்ந்ததில், விவசாய மந்திரியின் நிர்ப்பந்திற்குட்பட்டு சில பணிகளை மிக அவசரததுடன் நிறைவேற்றியதுடன், அவற்றை பிற்பாடு முறையான நடிவடிக்கைகளாக்ககார்ப்பரேஷன் அதிகாரிகள் பெரு முயற்சி மேற் கொண்டிருப்பதாகவே தெரிய வருகிறது என்றும் கமிட்டி கண்டனம்தெரிவித்துள்ளது.

### மேல் சபையில் அவசரப் பிரேரணைக்கு அனுதி மறுப்பு

பெங்களூர், ஜூன். 2—

விவசாய மந்திரி மீது பொதுநிறுவனங்கள்பற்றிய சட்டசபை கமிட்டி கண்டனம் தெரிவித்துள்ளதுபற்றி விவாதிக்கக்கோரி மைசூர்-மேல் சபையில் இன்று ஜன சங்க மெம்பர் கொண்டு வந்த அவசரப்பிரேரணையை அனுமதிக்க சபைத் தலைவர் காவோங்கர் மறுததுவிட்டார்.

# வாரத்துக்கு 7 நாள் வேலை முறை

# மில் முதலாளிகளின் பேராசை

## பம்பாய் தொழிலாளர் எதிர்ப்பு

பம்பாய், ஜூன். 1—

பஞ்சாலைகளில் வாரத்துக்கு ஏழுநாள் வேலை வாங்கும் முறை புகுத்தப்படுவதை எதிர்த்துப் போராட இங்குள்ள இடதுசாரி தொழிற்சங்க ஸ்தாபனங்கள் உறுதி பூண்டுள்ளன.

பம்பாய் மில் முதலாளிகள் சங்கம் தங்களுடைய கைப்பாவைச் சங்கமான தேசிய மில் தொழிலாளர்கள் சங்கத்துடன் இது சம்பந்தமாகப் பேச்சுநடத்தி ஒப்பந்தம் செய்து கொண்டுள்ளது.

முதலாளிகளின் கொள்ளை லாபத்தைப் பெருக்குவதற்காகவும், வேலையில்லாமல் தவிக்கும் ஆயிரக்கணக்கான தொழிலாளர்களின்வேலைவாய்ப்பைப் பறிப்பதற்காகவும் வாரத்தில் ஒரு நாள் கூட விடுமுறை அளிக்காமல் தொழிளார்களின் இடுப்பை ஒடிக்கும் 7 நாள் முறையைப் புகுத்த மில் முதலாளிகள் சங்கம் துடிதுடித்துக் கொண்டிருக்கிகிறது.

7-நாள் வேலை செய்தால் ஒருநாள் சம்பளம் கூடுதலாகக் கிடைக்கும் என்று தொழிலாளர்களுக்குஆசை வார்த்தைக் காட்டி, இந்த ஏற்பாட்டுக்கு தேசிய தொழிலாளர்கள் சங்கம் இணங்கியுள்ளது.

சி. ஐ. டி, யூ. சங்கமும், மற்ற இடதுசாரி சங்கங்களும் வாரத்துக்கு 7 நாள் வேலை வாங்கும்முறையைக் கடுமையாக எதிர்த்துள்ளன. மில்களில் மூன்று ஷிப்டுகளையும் முழுமையாக ஓட்டினல் மேலும் 60 ஆயிரம் பேருக்கு வேலை கொடுக்க முடியும் என்றும் இடதுசாரி சங்கங்கள் சுட்டிக் காட்டியுள்ளன.

இங்கிலையில் மில் முதலாளிகளின் தொழிலாளர் விரோத நடவடிக்கையை முறியடிக்கவும், ஒரு நாள் பொதுவேலை நிறுத்தத்துக்கு அறைகூவல் விடுக்கவும் பஞ்சாலை அரங்கத்தில் பணி புரியும் எல்லா தொழிற்சங்க ஸ்தாபனங்களின் கூட்டத்தைக் கூட்டப்போவதாக சி. ஐ. டி. யூ. சங்கத் தலைவர் தோழர் எஸ். எம். தால்வி அறிவித்துள்ளார்.

# குறைந்தபட்ச தேவையோ ரூ. 314 ஆனல் பரிந்துரையோ ரூ.185தான்

## சம்பளக் கமிஷன் அறிக்கையை கிழித்தெறியுமாறு பட்டாச்சார்யா உரை

புதுடில்லி, ஜூன் 1—

"இந்திய அரசாங்கத்தின் ஊதியக்கொள்கை என்ன? சுதந்திரம் வந்து 26 ஆண்டுகள் ஆகியுங்கூட, இந்த நாட்டின் தொழிலாளர்களுககு ஒரு தேசிய குறைந்தபட்ச ஊதியம் நிர்ணயிக்கப்படவில்லை"— என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் உறுப்பினர் தோழர் தினேன் பட்டாச்சார்யா குற்றம்சாட்டினர்.

அண்மையில் நடந்த லோக்சபைக் கூட்டத்தில் தொழிலாளர், சீரமைப்பு மந்திரி சபை மான்யத்தின் போது அவர் பேசினர். அவர் மேலும் பேசியதாவது:

### தேசிய குறைந்தபட்ச ஊதியம்

தேசிய குறைந்தபட்ச ஊதியம் எப்படி இருக்க வேண்டும்? 1956ம் ஆம் ஆண்டில் மத்திய தொழிற் சங்கங்களின் பிரதிநிதிகளும், முதலாளிகள் ஸ்தாபனங்களும் அரசாங்கத் தரப்பினரும் சேர்ந்து நடத்திய 15வது லேபர் மாநாட்டிலே அரசாங்கம் ஒரு தீர்மானத்துக்கு வந்தது. அதாவது, தேவையின் அடிப்படையிலான ஊதிய அமைப்பை உருவாக்க வேண்டும் என்று முடிவு செய்தது.

ஆனல் அரசின் அந்த திட்டம் இப்போது அந்தர் பல்டி அடித்துவிட்டது. அது பற்றி பேச்சு மூச்சே காணேம்.

### 314 தேவையிருக்க 185தான் நிர்ணயம்

மூன்று ஆண்டுகளுக்கு முன்பே ஒரு சம்பளக் கமிஷன் ஏற்படுத்தி அறிக்கை சமர்ப்பிக்குமாறு மத்திய அரசு கூறியது. சம்பளக் கமிஷன் சிபாரிசு செய்யும்போது 15-வது இந்தியத் தொழிலாளர் மாநாட்டில் நிர்ணயித்த தேவையின் அடிப்படையில் ஊதியம் என்ற திட்டத்தின் நோக்குப்படி கூட்ட வேண்டியதைக் கூட்டி, கழிக்க வேண்டியதைக் கழித்து— முடிவாக, தேவையின் அடிப்படையில் ரூ. 314 குறைந்தபட்ச சம்பளம் கொடுக்கப்பட வேண்டுமென்று பரிந்துரை செய்ய முன்வந்தது.

ஆனல், இடையிலே என்ன மாயம் நடந்ததோ மத்திய அரசு ஊழியர்களில் மிகமிகக் குறைந்த ஊதியம் பெவோருக்கு ரூ. 185 தான் குறைந்தபட்ச ஊதியம் என்றும் பரிந்துரை செய்திருக்கிறது.

### பேய்க்கமிஷன் ஒழிக

இதைக்கண்டு ஆத்திர முற்ற 30 லட்சம் மத்திய அரசு ஊழியர்கள், சங்க, அரசியல் வேறுபாடு எதுவும இல்லாமல், ஒரே குரலில், "பேய் கமிஷன் அறிக்கை ஒழிக!" என்று கூறி நிராசரித்து விட்டார்கள்.

சாதாரண 3-ம் வகுப்பு 4-ம் வகுப்பு ஊழியர்களுக்கு நல்லது செய்யாவிடாலும், இந்தப்பேய் கமிஷன் உயர்மட்ட அதிகாரிகளுக்கு சம்பளத்தை உயர்த்தி இருக்கிறது. அதிகார வர்க்கத்தினருக்கு சம்பளத்தை அதிகரித்துள்ளது; ஐ. ஏ. எஸ்.களுக்கும் கூட்டியிருக்கிறது.

### மலையைக் கெல்லி எலியைப் பிடித்தனர்

பேய் கமிஷன் பரிந்துரையில் ஆனை வருது, குதிரை வருது என்றெல்லாம் சொன்ஞர்கள். கடைசியாக, மலையைக்கெல்லி எலியைப் பிடித்த கதையாகத்தான் வந்து சேர்ந்திருக்கிறது. ஆகவே, பேய் கமிஷன் பரிந்துரையைக் கிழித்தெரியுங்கள். அதில் ஒன்றுமே இல்லை. இந்தியா முழுவதும் இந்த அறிக்கைக்கு எதிராக கடும் கண்டனம் எழுந்துவிட்டது"— என்று கூறினர்.

# சங்ககிரி சிமெண்ட் ஆலை மருத்துவ அதிகாரியின் ஆணவப் போக்கு

சங்ககிரி, ஜுன் 2 -

சங்ககிரி சிமெண்ட் ஆலை மருத்துவ அதிகாரி, மருந்து கேட்ட தொழிலாளியை கன்னத்தில் அறைந்தாராம்

சங்ககிரி இந்தியா சிமெண்ட் ஆலையில் சி. ஐ. டி. யூ. சங்கத்தைச் சேர்ந்த பி. பீரான்குட்டி கலாசியாக வேலை பார்த்து வருகிருர். அவர் சில தினங்களாக நெஞ்சுவலியால் அவதிப்பட்டு வந்தார்.

அவர் அரசாங்க மருத்துவ அதிகாரி எழுதிக் கொடுத்த மருந்து சீட்டை கம்பெனி மருத்துவ அதிகாரியிடம் காண்பிகது, இந்த மாத்திரைகள் இருந்தால் கொடுங்கள் என்று கேட்டபோது "நீ வெளியிலிருந்து யாருக்காவது லஞ்சம் கொடுத்து சீட்டு வாங்கி வந்திருப்பாய், அதற்கெல்லாம் மருந்து தரமுடியாது வெளியே போ" என்று ஆணவத்தோடுகூறிஞராம். இதைக் கேட்ட தொழிலாளி பீரான்குட்டி மாததிரைகள் இருந்தால் கொடுங்கள் என்றுதான் கேட்டேன். அதற்காக இப்படி கூறுகிறீர்களே என்று கேட்டபோதுதோழர்பீரான் குட்டியை மருத்துவ அதிகாரி நாகராஜராவு, கன்னத்தில் அறைந்து விட்டாராம்.

இது விபரம் பரவி, ஷிப்டிற்கு செல்லும் தொழிலாளர்கள் யாரும் ஷிபடிற்கு செல்லாமல், உதவி ஜெனரல் மேனேஜரை சந்தித்து மருந்து கேட்ட தொழிலாளியை அடித்துள்ள டாக்டர் மீது நடவடிக்கை எடுக்கக்கோரி வற்புறுத்தி கேட்டனர். தொழிலாளிகளின் இந்த ஏகோபித்த நிலையை கண்ட உதவி ஜெனரல் மேனேஜர், இது பற்றி நிச்சயம் நடவடிககை எடுக்கிறேன் என வாக்குறுதி அளித்த பிறகு அனைவரும் வேலைக்கு சென்றனர்.

அதன் பிறகு சி. ஐ. டி. யூ. சங்கப் பிரதிநிதி உதவி ஜெனரல் மானேரை சந்தித்து கேட்டபோது, என்னை தொந்தரவு செய்ய வேண்டாம் எனக்குகோபம் வரும் என்று பிரச்சினையை கை கழுவும் எண்ணத்தில் நழுவிச் சென்ருர்.

நிர்வாகத்தின் இந்த அலட்சியப் போக்கை கண்டித்தும், மருத்துவ அதிகாரியின் போக்கைகண்டிக்தும் தட்டிகள் எழுதி வைக்கப்பட்டன.

கம்பெனி கேட் முன்பு நின்று நீண்டநேரம் ஆர்ப்பாட்டம் செய்தனர். அதன் பின் 28—5—73 அன்று பிற்பகல் ஆலையின் உதவி ஜெனரல் மானேஜர் சி. ஐ. டி. யூ. சங்கத்தலைவர் தோழர் எஸ். பேலீசை அழைத்துபேச்சுவார்த்தை நடத்தினர்.

இதன்பின் ஆலையின் உதவி ஜெனரல் மானேசர் திரு. கே. ஏ. சுப்பிரமணியம் முன்னிலையில் சி. ஐ. டி. யூ. சங்கத்தலைவர் தோழர் எஸ் பேலீஸ், தோழர் பீரான்குட்டி ஆகிய இருவரிடமும் மருத்துவ அதிகாரி டாக்டர் நாகராஜராவு தனது செயலுக்கு வருந்துவதாகவும் அதற்காக மன்னிப்பு கோருவதாகவும்சேட்டுக்கொண்டார்.

# திருக்காட்டுப்பள்ளியில் திண்டுக்கல் வெற்றி விழா

## அனந்தநம்பியாருக்கு வரவேற்பு

திருக்காட்டுப்பள்ளி, ஜூன். 3—

தஞ்சை தாலுகா திருக்காட்டுப்பள்ளியில் அ தி மு க. சார்பில் திண்டுக்கல் தேர்தல் வெற்றிவிழா மே. 22-ல் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. ஏராளமானேருக்கு இனிப்பு வழங்கப்பட்டது.

கண்டமங்கலத்தில்நடக்கவிருந்த மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுக் கூட்டத்துக்காக அன்றைய தினம் இங்கு வந்திருந்த தோழர் கே. அனந்த நம்பியாருக்கு சிறபபான முறையில் மாலை அணிவித்து வரவேற்பளித்தனர்.

அதிர்வேட்டுகள் முழங்க வாண வேடிக்கைகள் ஜொலிக்க — அ தி மு க., மார்க்சிஸ்ட் தோழர்களும் பொதுமக்களுமாக 300-க்கு மேற்பட்டோர், தோழர் அனந்தநம்பியாரையும், என். வெங்கடாசலத்தையும் அலங்கார, வண்டியில் ஊர் வலமாக அழைத்து வந்தனர்.

திடீரென பெரும் மழை பெய்தபோதிலும் 'இடதுசாரி ஜனநாயக ஒற்றுமை ஓங்குக! தி மு க அரசே ராஜினமா செய்! போன்ற முழக்கங்களை விண்ணதிர எழுப்பிக் கொண்டு, ஊர்வலம் தொடர்ந்து நடந்தது சிறப்பாகவும் உணர்ச்சி மிக்கதாகவும் இருந்தது. சாலையில் இரு மருங்கிலும் பல்லாயிரக் கணக்கான மக்கள் ஆரவாரம் செய்து தலைவர்களுக்கு வரவேற்பு அளித்தனர்.

பின்னர் நடந்த கூட்டத்தில் தோழர் அனந்தநம்பியாரும், என். வெங்கடாசலமும் பேசினர்.

# நடக்க இருப்பவை

**மதுரையில்**

**இன்று (5-6-73)**

**மாலை 7 மணிக்கு**

**வடக்குமாசிவீதியில்**

இராமாயணசாவடிஅருகில்

தோழர்

**என். சங்கரய்யா**

பேசுகிருர்

**மதுரைகுமார்குழுவின்**

இன்னிசைநிகழ்ச்சியும்

நடைபெறும்

# லே-ஆப்புக்கு முழுச் சம்பளம்கோரி சேலம் மில் தொழிலாளர் ஆர்ப்பாட்டம்

சேலம், ஜூன். 3—

லே-ஆப் காலத்துக்கு முழுச்சம்பளம் கோரி இங்குள்ள ராஜேந்திரா அண்ட் ஜவஹர் மில் தொழிலாளர்கள் மே, 24ந் தேதி கலெக்டர்அலுவலகம் முன்பு ஆர்ப்பாட்டம் ஒன்று நடத்தினர்.

இவ்விருமில்களைச்சேர்ந்த சி, ஐ, டி. யூ,, ஏ. ஐ. டி. யூ. சி., அ. தி. மு. க. ஆகிய தொழிற்சங்கங்கள்சார்பில இந்தஆர்ப்பாட்டம்நடந்தது.

முன்னதாக ஆர்ப்பாட்ட ஊர வலம் ஜவகர்மில்கேட்டிலிருந்து, சேலம் ஜில்லா பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத் தலைவர் தோழர் வி. ராமசாமி தலைமையில் புறப்பட்டது.

செல்வாயப்பேட்டை முக்கிய கடைவீதி வழியாக சேலம் கலெக்டர் அலுவலகம் முன் சென்று ஆர்ப்பாட்டம் செய்தனர்.

லே-ஆப்புக்கு முழுச் சம்பளம், வேறுபாடின்றி எல்லாத்தொழிலாளர்களுக்கும் நிவாரணம் முதலிய கோரிக்கைகளை வலியுறுத்தியும், மத்திய-மாநில அரசுகளின் அடக்குமுறைகளைக் கண்டிததும. வலியுறுத்தியும் முழக்கங்களை எழுப்பினர்.

இந்த ஆர்ப்பாட்டத்துக்கு சி. ஐ டி. யூ. சங்கம்சார்பில் சி. சின்னததம்பி, [ராஜேந்திராமில்), ஆறுமுகம் (ஜவகர் மில்) ஏ.ஐ.டி.யூ.சி. செயலளார் சுப்ரமண்யம் அ. தி. மு. க. சார்பில் தங்கவேல் ஆகியோர்ஆர்ப்பாட்டத்துக்கு சிறப்பான ஏற்பாடுகளைச் செய்திருந்தனர்.

மாவட்டக் கலெக்டரைச் சந்தித்து கோரிக்கை மனுவை அளித்து, முதலமைச்சருக்கும் அனுப்பக் கோரினர்கள்.

### ஐ. என். டி. யூ. சி. தி. மு. க. வரவில்லை

இக்கோரிக்கைகளை வலியுறுத்தி கூட்டு இயக்கம் நடத்துவதற்காக, ஏ. ஐ. டி. யூ. சி, ஐ. என். டி. யூ. சி. தி. மு, க. ஆகிய மூன்று சங்கங்களுக்கும் சி.ஐ,டி.யூ. சங்கச் செயலாளர் அழைப்பு அனுப்பியிருந்தார், அதன்படிமே 20ந்தேதி இராஜேந்திரா சத்திரத்தில் கூட்டம் நடந்தது, அதில், 24-ந் தேதி ஆர்ப்பாட்ட ஊர்வலத்தில் அனைத்து சங்கங்களும், கலந்துகொள்வது என்று ஒப்புக்கொள்ளப்பட்டது.

ஆனல் ஆர்ப்பாட்ட ஊர்வலத்தன்று ஐ. என். டி. யூ. சி, தி. மு. க, சங்கங்களும் ராஜேந்திரா மில் ஏ. ஐ. டி, யூ. சி, கிளைச்சங்கமும் கலந்து கொள்ளவில்லை.

# ஜோனுஸ் கம்பெனியில் வேலை நிறுத்தம்

சென்னை, ஜூன். 2—

சென்னை குரோம்பேட்டையில் இருக்கும் ஜோனுஸ் ஸ்பிரிங் கம்பெனியில் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் நடைபெற்று வருகிறது.

நிர்வாக அதிகாரியின் தொழிற்சங்க விரோத போக்கை கண்டித்தும், தொழிற்சங்கத்தையும், தொழிலாளர்களையும், தொழிற்சங்க பிரதிநிதிகளையும் இழிவுபடுத்தி பேசியதையும், நிர்வாக அதிகாரியின் சர்வாதிகார போக்கை கண்டித்தும் தொழிலாளர்கள் 25—5—73-ம் தேதி முதல் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்து வருகிருர்கள்.

# ராஜபாளையம் செங்கல் - ஓடு தொழிற்சாலை நிர்வாகத்தின் போக்குக்கு கண்டனம்

ராஜபாளையம், ஜுன். 1—

இங்குள்ள செங்கல்-ஓடு உற்பத்தித் தொழிற்சாலை மீதான ஊழல் புகார் மனு ஒன்றில் கையெழுத்துப் போட்டதற்காக, ஒரு தொழிலாளிமீது பொய்க் குற்றம் சுமத்தி வேலை நீக்கம செய்துள்ளது அந்த தொழிற்சாலை நிர்வாகம்.

ராஜபாளையம் செங்கல் ஓடு உற்பத்தித் தொழிற்சாலை நிர்வாகததில் ஏற்பட்ட ஊழல் சம்பந்தமாக புகார் மனு ஒன்று, சென்னையில் உள்ள சிறு தொழில் கார்ப்பரேசன் டைரக்டர், மதுரையில் உள்ள உதவி டைரக்டர் ஆகியோருக்கு அனுப்பி வைக்கப்பட்டது. இந்த மனுவில் பலர் சாட்சிக் கையெழுத்துப் போட்டுள்ளார்கள்.

இதனல் ஆத்திரமுற்ற நிர்வாகம், தேங்காய் திருடியதாக துரைப்பாண்டியன் மீது பொய்க்குற்றம் சுமத்தி வேலையிலிருந்து நீக்கிவிட்டது.

குருசாமி என்ற கண்டக்டரை ஆபீஸ் வேலை இருப்பதாகச் சொல்லி கிளார்க் முத்துகிருஷ்ணன் என்பவர் தனது வீட்டுக்கு அழைத்துச் சென்று, அங்கு அடியாட்களைச் சுற்றி நிற்கச் செய்து பயமுறுத்தி பொய் 'வவுச்சரில்' கையெழுத்து வாங்கிஞராம். இந்த நடவடிக்கையும் நிர்வாகத்தின் தூண்டுதலின் பேரில்தான நடந்ததாம்.

நிர்வாகத்தின் இந்த அடாவடியைக் கண்டித்து தொழிற்சாலை முன்பாக தொழிலாளர்களின் கூட்டம் நடத்தப்பட்டது. இதில் தோழர்கள் ச. மாதவனும், மா. சேதுவும் நிர்வாகத்தின் தொழிலாளர் விரோதப் போக்கைக் கண்டித்துப் பேசினர்.

மேலும் நிர்வாகத்தின் அக்கிரமத்தைக் கண்டித்து, ஜுன் 6 முதல் 9 முடிய 4 நாட்களிலும் சேத்தூர், தளவாய்புரம, ராஜபாளையம் முதலிய இடங்களில் பொதுக்கூட்டம் நடத்துவது என்றும் தீர்மானிக்கப்பட்டுள்ளது.

# திண்டுக்கல் தீர்ப்பு...

(1-ஆம் பக்கத் தொடர்ச்சி)

முடிந்த இந்த உபதேர்தலில் மொத்தம் பதிவான வாக்குகளில் 18 சதவிகித வாக்குகளையே தி.மு.க. பெற முடிந்தது. தப்பினோம் பிழைத்தோம் என்ற வகையில் அது தன்னுடைய பொறுப்புத் தொகையைத்தான் பாதுகாத்துக் கொள்ள முடிந்தது. திண்டுக்கல் நாடாளுமன்றத்தொகுதிகளில் உள்ள ஆறு சட்டமன்றத் தொகுதிகளிலும் தி. மு. க.வுக்கு ஆதரவாக இருந்த வாக்குகளின் சதவிகிதம் பரிதாபகரமாக வீழ்ச்சியடைந்துள்ளது. திண்டுக்கல் சட்டமன்றத் தொகுதியில் பொறுப்புத் தொகையை வாங்குவதற்குத் தேவையான வாக்குகளைக்கூட தி. மு. க. பெறவில்லை.

## அமைச்சரவையை ராஜினாமா செய்க சட்டசபையைக் கலைத்திடுக

இவ்வாறு, திண்டுக்கல் நாடாளுமன்றத் தேர்தல் முடிவு தி. மு. க. வின் மக்கள் விரோத ஆட்சிக்கெதிராக மக்களின் கோபத்தையும், வெறுப்பையும் காட்டிடும் அளவுகோலாகவே விளங்குகிறது. தி. மு. க. அரசு தொடர்ந்து பதவில் நீடிக்கும் உரிமையை இழந்து விட்டதையே இத்தேர்தல் முடிவு எடுத்துக்காட்டுகிறது.

எனவே, தமிழக முதலமைச்சர் தனது அமைச்சரவையின் ராஜினாமாவைச் சமர்ப்பிக்க வேண்டும் என்றும் கலைத்துவிட்டு மக்களது புதிய தீர்ப்பைக் கோரவேண்டும் என்றும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சியின்தமிழ் மாநிலக்குழு கோருகிறது. இதுதான் உண்மையான ஜனநாயக வழி முறைகளுக்கும், தார்மீக நெறிகளுக்கும் உகந்ததாக இருக்கும்.

## மொழி-இனவெறிக்கு சரியான பதிலடி

தங்களுடைய ஆட்சியின் சாதனைகளைச் சொல்லி தி மு க தலைவர்களால் மக்களைத் திரட்ட முடியவில்லை. எனவே, தி மு க தலைவர்கள், குறிப்பாக திரு கருணாநிதி மிகக் கேவலமான இனவெறிப் பிரச்சாரத்தைக் கிளப்பி விட்டார். மொழியின் அடிப்படையில் மக்களிடையே பகைமையை உருவாக்க முயற்சித்தார். மக்களைத் திரட்டக்கூடிய திட்டமோ, கொள்கையோ இல்லாத தி மு க வின் அரசியல் ஞானசூன்யத்தையே இது அம்பலப்படுத்துகிறது. வாழ்க்கையின் அனுபவங்கள் சில உண்மைகளை தெளிவாக வலியுறுத்திக் காட்டுகின்றன. திண்டுக்கல் நாடாளுமன்றத் தொகுதியில் உழைக்கும் மக்களைப் பிளவுபடுத்தும் இக்கீழ்த்தரமரமான முயற்சிக்கு மக்கள் சரியான பதில் கூறி விட்டார்கள். தி மு க வின் மொழிவெறி, இனவெறி முயற்சிகளுக்கு தமிழகம் முழுவதிலுமுள்ள மக்களும் சரியான பதிலடி கொடுப்பார்கள் என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக்குழு உறுதியாக நம்புகிறது.

## இடதுசாரி ஜனநாயக அணி

அகில இந்திய ரீதியில், ஆளும் காங்கிரஸ் கட்சிக்கு எதிராக வல்லமைமிக்கதொரு மாற்று சக்தியாக இடதுசாரி ஜனநாயக அணி உருவாக வேண்டியுள்ளது. இடதுசாரி ஜனநாயக அணியின் ஒரு பகுதியாகவே, தமிழ்நாட்டில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, அ. தி. மு. க., இந்தியக்கம்யூனிஸ்ட்கட்சி, ஏனையஜனநாயகக்குழுக்களின் ஒற்றுமையைபலப்படுத்தி இடதுசாரிஜனநாயக அணியை உருவாக்க வேண்டியது அவசியமாகும்.

தேர்தல் காலங்களில் உருவாகும் இத்தகைய ஒற்றுமையும் உடன்பாடுகளும் மட்டும் இந்த அணியை உருவாக்குவதற்குப் போதாது. தங்களுடைய வாழ்க்கை நிலைமைகளை அபிவிருத்தி செய்ய ஜனநாயக உரிமைகளையும் பிரஜா உரிமைகளையும் பாதுகாக்கவும், அடக்குமுறைகளை எதிர்த்தும், மக்களது வாழ்க்கைத் தரங்களுக்கு எதிராகத் தொடுக்கப்படும் தாக்குதல்களை எதிர்த்தும், விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள், தொழிலாளர் ஆகிய சகல உழைக்கும் மக்களும் நடத்திடும் எண்ணற்ற போராட்டங்களிலே தான் இத்தகைய இடதுசாரி ஜனநாயக அணி உருவாக முடியும். இந்தப் போராட்டங்களில் மேற்கூறிய இடதுசாரி ஜனநாயக கட்சிகளைப் பின்பற்றும் மக்கள் மேலும் மேலும் அதிகமாகப் பங்கு கொண்டு நடைமுறையில் ஒற்றுமை காண்பதன் மூலமே இத்தகைய இடதுசாரி ஜனநாயக அணி உருவாகும்.

தொடர்ந்து உயர்ந்து கொண்டே போகும் விலைவாசி உயர்வுக்குக் காரணமாகவும், வளர்ந்து வரும் வேலையில்லாத திண்டாட்டத்துக்கு காரணமாகவும் உள்ள கொள்கைகளை எதிர்த்து சகல பகுதி மக்களும் நடத்திடும் போராட்டங்களின் மூலம்தான இந்த அணி உருவாகும்

## ஏகபோக முதலாளிகளை கொழுக்கவைக்கும் மத்திய அரசு

கடந்த இரண்டாண்டு காலமாக இந்தியப் பொருளாதார நெருக்கடி மேலும் ஆழமாகி தீவிரமாகிவருகிறது. ஆளும் காங்கிரஸ் பின்பற்றும் கொள்கைகளின் விளைவே இவை. இந்தக் கொள்கைகள் பிளவு படாத காங்கிரசின் கொள்கைகளிலிருந்து மாறுபட்டவை அல்ல. இந்திய ஏகபோக முதலாளிகளையும் அந்நிய ஏகபோக முதலாளிகளையும் மேலும் மேலும் கொழுக்க வைக்கும் கொள்கைகளையே ஆளும் காங்கிரசால நடத்தப்படும் மத்திய அரசு பின்பற்றுகிறது.

நிலப்பிரபுக்களின் சுரண்டலை ஒழிக்க மறுக்கிறது ஏகபோக முதலாளிகளிடமும் கள்ள மார்க்கெட் சூதாடிகளிடமும் குவிந்துள்ள கருப்புப் பண பொருளாதாரத்தைக் கருவறுக்க உறுதியான நடவடிக்கை எடுக்க மறுக்கிறது. அமைச்சர்கள், சட்டமன்ற உறுப்பினர்கள், அதிகாரிகள் ஆகியோரை லஞ்சம் கொடுத்து விலைக்கு வாங்கி பொருளாதாரச் சூதாட்டங்கள் நடத்தப் பயன்படுத்தப்படும் இந்தக் கருப்பு பணத்தை ஒழிக்க தேவையான நடவடிக்கை எடுக்க மறுக்கிறது. இதன் விளைவாக எல்லா மட்டங்களிலும் பயங்கரமான அளவில் லஞ்ச ஊழல்கள் மலிந்துவிட்டன.

ஏகபோக முதலாளிகள், நிலச்சுவான்தார்கள் வர்த்தகச் சூதாடிகள, லேவாதேவிக்காரர்கள் ஆகியோர் மக்களைக் கொள்ளையடிப்பதை தடுத்துநிறுத்தி, அபிவிருத்தி திட்டங்களுக்கு தேவையான செல்வாதாரங்களைத்திரட்டுவதற்குப் பதிலாக, நடைமுறையில சுரண்டும் கும்பல்கள் மேலும் கொழுத்துப் பெருக்கவே ஆளும் காங்கிரஸ் உதவி செய்கிறது. அன்றாடம் மக்கள் பயன்படுத்தும் அத்தியாவசியப் பண்டங்கள் மீது தாங்க முடியாத அளவுக்கு மத்திய அரசு வரிவிதிக்கிறது.

பணவீக்கத்தைவளர்க்கும்விதத்தில்நோட்டுக்களை அச்சடித்து வரவுக்கு மீறி செலவு செய்வதன் மூலமும், பற்றுக்குறை வரவு—செலவுத்திட்டம் தயாரிப்பதின் மூலமும் மேலும் மேலும் விலைவாசிகள் அதிகரித்துக் கொண்டே போகும்படி செய்கிறது. இதன் மூலம் சுரண்டும் கும்பல்கள் மேலும் மேலும் கொள்ளையடிக்கவே, உதவி செய்கிறது.

## "நிலைபலமான ஆட்சி"- கோஷம் அம்பலமானது

இதன் விளைவாகவே, நம் நாட்டில் உள்ள சகல பகுதி மக்களிடையேயும் அதிருப்தி வளர்ந்து கொண்டே போகிறது. அதன் காரணமாக, போராட்டங்கள் பல வெடித்தன, வெடித்துக் கொண்டே இருக்கின்றன. ஒவ்வொரு மாநிலத்திலும், மக்கள் போராட்டங்கள் அலைமோதுகின்றன. இந்தப் போராட்டங்களை ஆளும் காங்கிரஸ் பயங்கரமான அடக்குமுறைகள் மூலம் ஒடுக்கிவிட முயற்சி செய்கிறது. இப்போராட்டங்களுக்கு எதிராக பாதுகாப்புச் சட்டத்தைப் பயன்படுத்துவதன் மூலமும் 1971 டிசம்பரில் நடந்த இந்தியா—பாகிஸ்தான் யுத்தத்தையொட்டி ஏற்படுத்தப்பட்ட நெருக்கடி காலபிரகடனத்தை நீடிப்பதன் மூலமும் ஒடுக்க முயற்சிக்கிறது.

இத்தகைய மக்கள் விரோதக் கொள்கைகளைப்பின்பற்றுவதன் காரணமாக ஆளும் காங்கிரஸ் ஆட்சி புரியும் ஒவ்வொரு மாநிலத்திலும், பெரிய அளவில் உள்கட்சி கோஷ்டிச் சண்டைகள் வளர்ந்து வருகின்றன. ஆளும் காங்கிரசின் இத்தகைய கோஷ்டிச் சண்டைகள், மேற்கு வங்கத்தில் ஒரு கோஷ்டிக்கு எதிராக, மற்றொரு கோஷ்டி, குண்டர்கள் தாக்குதல்களைத் தொடுத்து கொலை புரியும் அளவிற்குச் சென்றுள்ளன.

இரண்டாண்டுகளுக்கு முன்பு நடந்த தேர்தலின் போது, நிலையான ஆட்சி நடத்தப் போவதாக அறிவித்த இந்திராகாந்தி, இன்று காங்கிரஸ் ஆட்சி செய்யும் எந்த மாநிலத்திலும நிலையான அமைச்சரவைகளை உருவாக்க முடியவில்லை என்பது அம்பலமாகிவிட்டது.

ஆளும் காங்கிரசின் பகட்டான கோஷங்களால் திண்டுக்கல் வாக்காளர்கள் ஏமாந்துவிடவில்லை. உண்மையில் அந்தக்கட்சியின் செயல்களையும் நடைமுறைகளையும் கொண்டுதான் மக்கள் தீர்மானித்தார்கள். இவ்வாறு அந்தக்கட்சிக்கு இங்கு இடமில்லை என்று மக்கள் தீர்ப்பளித்தது குறித்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலக்குழு மகிழ்ச்சி அடைகிறது.

## ஆளும் காங்கிரசின் முயற்சியை முறியடிப்பீர்

இந்த உபதேர்தலில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கும், அ. தி. மு. க. வுக்குமிடையே உருவான இந்த ஒற்றுமையைத் தகர்க்க, தன்னுடைய அளவற்ற நிதி வசதிகளையும் அரசாங்க அதிகாரத்தையும் பயன்படுத்தி ஆளும் காங்கிரஸ் பல சாகசங்கள் புரியும் என்று மார்க்சிஸ்ட கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக் குழு அ.தி.மு.க வுக்கு சுட்டிக்காட்ட விரும்புகிறது. அந்த முயற்சிகளை முறியடிக்க வேண்டுமென்றும் அ.தி.மு.கவை கேட்டுக் கொள்கிறது.

ஆளும் காங்கிரசின் கொள்கைகளின் விளைவாக மக்களிடையே ஏற்பட்டுள்ள அதிருப்தியைத்தான் ஸ்தாபன காங்கிரஸ், சுதந்திரா, ஜனசங்கம் ஆகிய வலதுசாரி பிற்போக்குக் கட்சிகள் பயன்படுத்திக்கொள்ளகிறது என்பதை இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவர்களும், அணிகளும் பார்க்க வேண்டுமென்று மார்க்சிஸ்ட் கமயூனிஸ்ட் கட்சியின் தமிழ்மாநிலக்குழு வேண்டுகிறது

ஆளும் காங்கிரசின் இந்தக்கொள்கைகளை ஏனைய இடதுசாரி ஜனநாயக சக்திகளுடன் சேர்ந்து நின்று இந்திய கம்யூனிஸ்ட் கட்சியும் தொடர்ந்து இடைவிடாமல் எதிர்த்துப் போராடினாலொழிய வலதுசாரிபிற்போக்குசக்திகளின் முயற்சிகளைத் தடுத்து நிறுத்த முடியாது என்பதை அவர்கள் உணரவேண்டும்; அவ்வாறு போராடி, காங்கிரசுக்கு மாற்றாக, ஓர் இடதுசாரி ஜனநாயக அணியை உருவாக்க முன்வரவேண்டும் என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ்மாநிலக்குழுகேட்டுக்கொள்கிறது

தொழிலாளர்கள், விவசாயத் தொழிலாளர்கள் ஆகியோரது கூலி உயர்வுக்காகவும், விவசாயிகளின் கடன் சுமையை ஒழிப்பதற்கும், நில வெளியேற்றத்தைத் தடுப்பதற்காகவும், மாணவர்கள் ஆசிரியர்கள் ஏனைய சகல பகுதி உழைக்கும் மக்களின் உடனடி கோரிக்கைகளுக்காகவும், அ.தி.மு.க. இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி ஆகிய கட்சிகளின் அணிகளுடன் உருவான உறவுகளைப் பலப்படுத்தி, அவர்களுடன் இணைந்து நின்று ஒன்றுபட்ட போராட்டங்களை நடத்தப் பாடுபடவேண்டுமென்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தனது உறுப்பினர்களையும் ஆதரவாளர்களையும் கோருகிறது

இன்று நாட்டில் பாதிக்கப்பட்டுள்ள சகல பகுதி மக்களுக்கும் நிவாரணம் கிடைப்பதற்காக இத்தகைய போராட்டங்கள் அவசியம்.

தங்கள் மீது தொடுக்கப்படும் தாக்குதல்களை தொடுக்க முடியும என்ற நம்பிக்கையை இத்தகைய போராட்டங்கள் மூலம் மக்களிடையே உருவாக்குதல் வேண்டும். இக்குறிக்கோளுடன் சமீபத்தில் நடந்து முடிந்த தேர்தலில் ஏற்பட்ட ஒற்றுமையை மேலும் பலப்படுத்தி, ஒன்றுபட்ட போராட்டங்களையும், இயக்கங்களையும் நடத்துவது அவசியம் என்பதை அதிமுக, இந்தியக் கமயூனிஸ்ட் கட்சி, ஏனைய ஜனநாயகக் குழுக்களின் பிரதான கவனத்துக்குக் கொண்டு வர விரும்புகிறது.

## இயக்கம் நடத்துவோம்

இதற்கு முதல்படியாக, நம் நாட்டு மக்களைப் பாதிக்கும் கீழ்க்காணும் உடனடிப் பிரச்சினைகளை இக்கட்சிகளின் பரிசீலனைக்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக்குழு முன் வைக்கிறது.

1 கைத்தறி நெசவாளர்களுக்கு ஏற்பட்டுள்ள நெருக்கடியையும், வேலையில்லாத் திண்டாட்டத்தையும் போக்க அவர்களுக்கு நிர்ணயிக்கப்பட்ட விலையில் நூல் விநியோகம் செய்தல்.

2 விலைவாசி உயர்வை எதிர்த்தும், பணவீக்கத்தன்மை வாய்ந்த பற்றுக் குறை வரவு-செலவுத் திட்டத் திட்டத்தை எதிர்த்தும் உபயோகப் பண்டங்களின் மீது வரி விதிப்பதை எதிர்த்தும் இயக்கம் நடத்துதல். அத்தியாவசியப் பொருட்கள் அனைத்தையும்சர்வ கட்சி குழுக்களின் கண்காணிப்பின்பேரில் விரிவான அளவில, நியாய விலைக்கடைகள் மூலம்வினியோகித்தல்.

3) அடக்குமுறை, போலீஸ் அக்கிரமங்கள், குண்டர்களின் தாக்குதல்கள் ஆகியவற்றுக்கு எதிராக இயக்கம் நடத்துதல்—தொழிலாளர்மாணவர்கள், ஆசிரியர்கள் ஆகிய போராடும் மக்கள் பிரிவினர் மீது தொடுக்கப்படும் எல்லா வழக்குகளையும் வாபஸ் வாங்க வற்புறுத்தல்—எதிர்க்கட்சி உறுப்பினர்களுக்கும் ஆதரவாளர்களுக்கும் எதிராக தொடுக்கப்பெற்றுள்ள எல்லா வழக்குகளையும் வாபஸ் வாங்கவைத்தல்—திண்டுக்கல் நாடாளுமன்றத் தேர்தல் சமயத்தில், எதிர்க்கட்சி ஊழியர்கள் ஆதரவாளர்கள் மீது தொடுக்கப்பட்ட எல்லா வழக்குகளையும் வாபஸ் வாங்குமாறு செய்தல்.

4) சகல மட்டங்களிலும் தோன்றியுள்ள லஞ்ச—ஊழல்களை எதிர்த்தல்.

5) எல்லோருக்கும் வேலை கிடைக்கவும், வேலையில்லாத காலத்தில நிவாரணம் கிடைக்கவும் வலியுறுத்தல்.

இத்தகைய பிரச்னைகளின் பேரில் போராட்டங்களையும் இயக்கங்களையும் நடத்துவதின் மூலமே, தி மு க அரசாங்கத்தை தனிமைப் படுத்தி -சட்ட சபையைக் கலைத்துவிட்டு புதிய தேர்தலை தி மு க சந்திக்க வேண்டும் என்ற மக்களது கோரிக்கையை, ஆட்சியாளர்கள் நிராகரிக்க முடியாததொன்றாக ஆக்க முடியும் என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக்குழு நம்புகிறது.

# உழைப்பு மூலம் அறிவுபெற சீனாவில் மாபெரும் இயக்கம்

## மாணவர்களுக்கும், படிப்பாளிகளுக்கும் தொழிலாளி, விவசாயிகளே ஆசிரியர்

டீன்ஸ்டின், ஜூன். 2— சீனாவில். டீன்ஸ்டின் நகரில் உள்ள 2000 தொழிற்சாலைகளும், அந்த நகரைச் சுற்றியுள்ள 70 கம்யூன்களும் (பஞ்சாயத்து). மாணவர்களுக்கு தொழிற் கல்வியும், விவசாயக் கல்வியும் புகட்டுவதில் உதவி புரிந்து வருகின்றன.

ஆரம்பப் பள்ளிகளிலும் நடுத்தரப் பள்ளிகளிலும் பயிலும் மாணவர்கள், வெறுமனே புத்தக அறிவோடு நிற்காமல், நடைமுறை வாழ்க்கையில் தொழில் எப்படி செய்ய வேண்டும்?-என்று கற்றுக் கொண்டால்தான், இளம் வயதிலேயே நல்லதோர் உலகக் கண்ணோட்டம் ஏற்பட உதவும்படியாக இருக்கும் என்று சீன சர்க்கார் நம்புகிறது.

### ஆலைகளும் கம்யூன்களும்

இந்த அடிப்படையில் சீனாவில் உள்ள அனைத்து தொழிற்சாலைகளும், மக்கள் கம்யூன்களும், ஆங்காங்குள்ள பள்ளிக்கூடங்களை இணைத்து, மாணவர்களுக்கு உழைப்பு கல்வி ஊட்டி வருகின்றன.

மாணவர்களுக்கு உழைப்புக் கல்வி ஊட்டுவதில், ஆலைத் தொழிலாளர்களும், கம்யூன் விவசாயிகளும் அதிக அக்கறை எடுத்துக் கொள்ளுகிறார்கள்.

ஆலைத் தொழிலாளர்கள் மட்டுமின்றி, இரயில்வே தொழிலாளர்களும, மாணவர்களுக்கு உதவி புரிகிறார்கள்.

### புத்தக அறிவு போதாது

புத்தகப் படிப்புடன் உழைப்புக் கல்வியும் பெறுவதால் — உற்பத்தியைப் பெருக்குவது எப்படி? சிக்கனமாய் இருப்பது எப்படி? கடினமான வேலைகளை எந்த முறையில் செய்ய வேண்டும்? கபடமில்லாவாழ்க்கை எப்படி நடத்துவது? தொழில் கட்டுப்பாடு எப்படி இருக்க வேண்டும்?— என்பவற்றை எல்லாம் தொழிலாளர்களும், விவசாயிகளும் கற்றுக் கொடுக்கிறார்கள்.

அரசியல், தத்துவம், முதலாளித்துவ சமுதாயத்தில் இருந்த நிலைமைகள், சோஷலிசத்தின் மேன்மைகள், உழைக்கும் மக்களின் சிறந்த பண்புகள் ஆகியவற்றைப் பற்றியெல்லாம் சொல்லிக் கொடுக்கிறார்கள்.

இதே போன்று விவசாயிகளும், பயனற்றுக் கிடந்த பாழ் நிலத்தைப் பண்படுத்தியது எப்படி? தோட்ட வேலைகள்—வயல்வேலைகள் முதலியவற்றைப் பற்றியும், பருவ காலங்கள், பல்வேறு ரக விதைகள், உரங்கள் ஆகியவற்றைப் பற்றிய ஞானத்தையும் ஊட்டுகிறார்கள்.

### படிப்பாளிகள் மறுபடியும் படிக்க

மாணவர்களை மட்டுமல்ல சீனாவிலுள்ள ஆசிரியர்கள் எழுத்தாளர்கள். அரசுஊழியர்கள், ஆராய்ச்சியாளர்கள், நடிகர்கள், பாடகர்கள், டாக்டர்கள் போன்ற படிப்பாளிகளையெல்லாம் விவசாயிகளிடமும், சிறு நில விவசாயிகளிடமும் மறுபடிப்புப் படிக்க, கிராமங்களுக்கு அனுப்புகிறார்கள்,

கிராமங்களில் இவர்கள் விவசாயிகளைப் போல் வாழவும், அவர்களது உழைப்பிலே பங்கு கொண்டு அனுபவம் பெறவும், நாட்டுக்கு உணவளிக்கும் விவசாயிகளின் உழைப்பின் பெருமையை உணரவும், கிராமகைத்தொழில்களைகற்றுக் கொள்ளவும், படித்தவர்கள்தான் மேலானவர்கள் என்ற அகம்பாவத்தை ஒழித்து உழைப்பாளி மக்களுக்கு தன்னடக்கத்துடனும் உற்சாகத்துடனும் பணிபுரியக்கூடிய பண்புகளை வளர்க்கவுமே இவ்வாறு அனுப்பப்படுகிறார்கள்.

குறிப்பிட்டகாலம் வரையும் மறுபடிப்பு படித்து மீண்டும் நகர்களுக்கு வந்து சிறந்த முறையில் தேசபக்தியுடன் பணியாற்றுகிறார்கள்.

## விமானப் போக்குவரத்தில் மாற்றம்

புதுடில்லி, ஜூன். 1— டில்லி-கல்கத்தா- டில்லி பாதையிலும், கல்கத்தா-காத்மாண்டு- கல்கத்தா பாதையிலும் சென்று கொண்டிருந்த இரண்டு போயிங் விமானங்களின் போக்குவரத்தை உடனடியாக இந்தியன் ஏர்லைன்ஸ் நிறுத்தியிருக்கிறது.

நேற்றிரவு டில்லியில் போயிங் 737 விமானத்துக்கு ஏற்பட்ட விபத்தையொட்டி இந்த நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது.

மற்றும் சில மாறுதல்களும் செய்யப்பட்டுள்ளன.

டில்லி-பம்பாய்- டில்லி பாதையில் சென்று கொண்டிருந்த போயிங் விமானத்துக்குப் பதிலாக காரவல்லி விமானம் விடப்படுகிறது. டில்லி- காத்மாண்டு- டில்லி பாதையில் போயிங்குக்கு பதிலாக, வாரத்துக்கு மூன்று முறை வைகௌண்ட் விமானப் போக்குவரத்து நடைபெறும்.

கல்கத்தா- டில்லி பாதையில் இதுவரை காரவல்லி விமானப் போக்குவரத்து நடைபெற்று வந்தது. இனி அதற்குப் பதிலாக போயிங் 737 விமானம் விடப்படும்.

## எஸ். எஸ். எல். சி. தேர்வில்100சதவீத வெற்றி

### இந்திய மாணவர் சங்கம் பாராட்டு

ஓடைப்பட்டி, ஜூன், 4— ஓடைப்பட்டி அரசு உயர்நிலைப்பள்ளியிலிருந்து கடந்த எஸ். எஸ். எல். சி. தேர்வில் கலந்து கொண்ட அனைவரும் தேறியுள்ளனர். சென்ற ஆண்டும் இப்பள்ளி மாணவர்கள் நூறு சதவீதம் வெற்றி பெற்றுள்ளனர்.

இந்த வெற்றிக்கு காரணமான பள்ளி ஆசிரியர் குழுவிற்கும், தலைமையாசிரியருக்கும், மாணவர்களுக்கும் இந்திய மாணவர் சங்கத்தின் ஓடைப்பட்டி கிளையும், ஓடைபட்டி மார்க்ஸ் மன்றமும் தன்னுடைய பாராட்டைத் தெரிவித்தது.

## நடக்க இருப்பவை

மதுரை

மாணவாளன் குழுவினரின் இன்னிசை நிகழ்ச்சி

ஜூன் 4 குளத்துப்பட்டி (உசிலம்பட்டி)

5 — மதுரை நகர்

7 முதல் 16 முடிய - கோவை மாவட்டம்

திருச்சி

டவுன் ஹாலில்

7—6—73 மாலையில்

தோழர்கள்:

பி. ராமமூர்த்தி

பாப்பாஉமாநாத்

பேசுவர்.

## தகுதி பெருத தி. மு. க. .....

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

தொழிலாளர்களாக ஆக்க வேண்டும் என்று மின்வாரியத் தலைமை உத்தரவு போட்டது.

அதன்படி, சூப்ரண்டிங் இன்ஜினீயர், ஒரு 159 தொழிலாளர்களை நிரந்தரமாக்க வேண்டியிருந்தது. அதற்கான உத்தரவுகளையும் எழுதிவிட்டார்.

### வீடு முற்றுகை

அன்று மாலையே தி, மு. க.வைச் சேர்ந்த 500 பேர், கத்தி, கம்புகளை ஏந்திக் கொண்டு, இன்ஜினீயர் வீட்டை வளைத்துக் கொண்டார்கள்.

கத்தியும் கையுமாய் வந்த இந்தக்கூட்டம், இன்ஜினியரைப் பிடித்து இழுத்து, மின் அலுவலகத்திற்குக் கொண்டு சென்றார்கள்.

அலுவலக நேரம் கடந்து விட்ட பிறகு,அலுவலகத்துக்கு வரும்படி இழுக்கலாமா என்று இன்ஜினீயரும் எவ்வளவோ சொல்லிப் பார்த்திருக்கிறார் ஒன்றும் முடியவில்லை.

அலுவலகத்திற்குள் புகுந்து, அங்கு ஏற்கனவே இன்ஜினியர் போட்டிருந்த உத்தரவுகளையெல்லாம் கிழித்துப் போடும்படி அவர்கள் அவரைநிர்ப்பந்தித்தார்கள்.

### தகுதி அற்றவருக்கு பதவி உயர்வு

பழைய உத்தரவுகளைக் கிழித்துப்போட்டு விட்டதுடன், தி, மு. க. வைச் சேர்ந்தவர்களுக்கு திறமையான வேலைக்கு உரிய பதவிகளை கொடுக்குமாறு கட்டாயப்படுத்தினார்கள். அப்படி அவர்களுக்கு பதவி உயர்வு உத்தரவையும் போடுமாறு செய்து விட்டார்கள்.

### மந்திரிகள் தலையீடு

இந்த அநீதிகளைப் பற்றி நான் மின் வாரியத்தலைவரிடமும், மற்றுமுள்ள சீனியர் அதிகாரிகளிடமும் முறையிட்டேன்.

அதற்கு அவர்கள் "ஆம் அநியாயம் நடந்துதான் உள்ளது. ஆனால் நாங்கள் தலையிட்டு எதுவும் செய்ய முடியதே! மந்திரிகளின் குறிப்புகள் அவ்வாறு இருக்கின்றதே!"என்று வருத்தத்துடன் கூறினார்கள்.

இப்படியாக பாரபட்சமும் நிருவாகத்தில் தி. மு. க. தலையீடும்நடந்திருக்கிறதா? இல்லையா? இதை முதலமைச்சரால் மறுக்கமுடியுமா?

### யாரைத் தாழ்த்தினர்? எவரைஉயர்த்தினர்?

இதோ! வேலைக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட 159 பேர்களின் பட்டியலையும். அவர்களில் யார் யாருக்கு பதவி உயர்வும், தாழ்ந்த பதவிகளும் கொடுக்கப்பட்டிருக்கின்றன என்றவிபரத்தையும்முன்வைக்கறாங்கள் தயார்.

சிலருக்கு பிட்டர் வேலை கொடுக்கப் பட்டிருந்தது. மற்றவர்களுக்கு வெல்டர் வேலை, தற்காலிகமாக.

ஆனால் இப்பொழுது இவர்களுக்கெல்லாம் வாட்ச்மேன் போன்ற குறைந்த சம்பள வேலையே கொடுக்கப்பட்டிருக்கிறது.

அதே சதயத்தில் உயர் பதவிகளுக்குஉரிமை கோர தகுதிபெருத தி. மு. க. ஆட்களுக்கு, தி.மு.க. அல்லாதவர்கள் வகித்துவந்த பிட்டர், வெல்டர் போன்ற உயர்ந்த வேலைகளைக் கொடுத்திருக்கிறார்கள். இது எந்த நியாயத்தின் பாற்பட்டது?

வேலை நியமன உத்தரவுகளைக் கொண்டுவந்து காட்டுவதற்கு நாங்கள் தயாராக இருக்கிறோம்.

அதே போன்று தி. மு. க. ஆட்கள் தங்களுடைய நியமன உத்தரவுகளைக் கொண்டுவந்து காட்டத் தயாரா? நிரந்தரமாக்குவதற்கு முன்னுள் அவர்கள் என்ன வேலையில் இருந்தார்கள் என்ற விபரத்தை வெளியிட்டு, தங்களுக்கு மேல் பதவி கொடுக்கபட்டது நியாயம்தான் என்று கூறுவதற்கு அவர்கள் முன் வருவார்களா?— என்று கேட்கிறேன்.

### ஓவர்டைம் ஊதியம் தி.மு.க.வுக்கு மட்டும்

இன்னொரு அநியாயத்தையும கேளுங்கள்.

மின்சார போர்டில் கிளர்க்குகள் போதுமான அளவு இல்லை. அதனால் பில்கள் ஏராளமாகத் தேங்கிக் கிடக்கிறது. இதற்காக கிளர்க்குகள் ஓவர்டைம் வேலை பார்க்கவேண்டியுள்ளது.

இப்படி ஓவர்டைம் பார்ப்பவர்களில், தி.மு.க. சங்கத்தைச் சேர்ந்தவர்களுக்கு மட்டும் ஓவர்டைம் ஊதியம கொடுக்கிறார்கள்.

தி மு.க, அல்லாதவர்களுக்கு ஓவர்டைம் ஊதியம் கொடுப்பதில்லை.இதுபற்றிக் கேட்டால், தி.மு.க. சங்கத்தில் சேர்ந்தால் தான் கிடைக்கும் என்கிறார்கள். இதைக்காட்டிலும அநீதி வேலை ஏதாவது இருக்க முடியுமா?

### கழக வாரியமா

இதற்கு மேல் என்ன ஆதாரம் வேண்டுமென்று கேட்கிறார் முதலமைச்சர்? முதலமைச்சரும் அவரது அரசும் மின்வாரியத்தை தன் கட்சி வாரியமாகததான் நடத்துகிறார்கள் என்பதற்கு இதுவே அத்தாட்சி.

கட்சி அடிப்படையில் தான் பதவி உயர்வுகளும் இட மாற்றங்களும் அளிக்கப்படுகின்றன.

### அநீதிகளை எதிர்த்து ஆர்த்தெழுவோம்

மின்வாரியம் போன்ற மிகப்பெரிய அமைப்புகளையும், அதன் செல்வாதாரங்களையும் வேலை வாய்ப்புகளையும், முதலமைச்சரும் அவரது கட்சியும்தமதுசொந்த நலனுக்கே பயன் பயத்திக் கொள்ளுகிறார்கள் என்பதற்கும்—மற்றவகளின் நலன்களைப் புறக்கணிக்கிறார்கள் என்பதையும் நிரூபிக்க, அசைக்க முடியாத ஆதாரங்களைக் காட்டத் தயாரா இருக்கிறோம்.

தொழிற்சங்க உரிமைகளும் மறுக்கப் படுகின்றன.

இதே நிலைமை நீடிக்குமேயானல் வேறு வழியில்லாத நிலைமையில் தொழிலாளர்கள் அனைவரும் ஆர்த்தெழுந்து வேலைநிறுத்தப் போரில் இறங்குவார்கள்.

இந்த அநியாய அக்கிரமங்களுக்கெல்லாம் முற்றுப் புள்ளி வைக்க அனைத்துத் தொழிலாளர்களும் ஐக்கியப்படுவார்களாக!

## ஒரத்தூரில் "செவ்வானம்" நாடகம்

நாகை, மே. 30— நாகைக்கு அருகிலுள்ள ஒரத்தூர் என்னும் கிராமத்தில் லெனின் மன்றத்தின் சார்பில் தோழர் கே. முத்தையாவால் எழுதப்பெற்ற "செவ்வானம்" நாடகம் வெகு சிறப்பாக நடத்தப்பட்டது.

இந்நாடகத்தில் நாகை அரசினர் கல்லூரி மாணவர்களும், லெனின் மன்றத் தோழர்களும் பங்கு கொண்டு மக்கள் போற்றும் வகையில் சிறப்பாக நடத்தினர்.

இந்த நிகழ்ச்சிக்கு இந்திய மாணவர் சங்கத்தின் தமிழ் நாடு கிளைச் செயலாளர் தோழர் பெ. மணியரசன் தலைமை வகித்து, நடிப்பில் பங்கு கொண்டோரையும் இதனைத் தயாரித்த லெனின் மன்றத்தாரையும் வாழ்த்தினர்.

இந்திய கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில், [13, முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.